ओं श्री :
श्री शंकराचार्य गुरुचरणारविन्दाभ्यां नम :
सत्यमेव जयते नानृतं

## அனந்தானந்தகிரி சங்கர விஜயம்.

மதருஸ் யுனிவெர்ஸிடி வெளியீடு—1971.








# ஸத்யான்வேஷணம்.



M.E. சங்கரநாராயண சர்மா,
அனந்[illegible]பாத சிஷ்யர்கள் ஸபை,
49, லெக்ஷ்மிநாராயணபுர அக்ரஹாரம்,
மதுரை - 1.

[விலை 75 காசு

ओं श्री :
श्री शंकराचार्य गुरुचरणारविन्दाभ्यां नम :
सत्यमेव जयते नानृतं

## அனந்தானந்தகிரி சங்கர விஜயம்.

**மதருஸ் யுனிவெர்ஸிடி வெளியீடு—1971.**



# ஸத்யான்வேஷணம்.

**M. E. சங்கரநாருயண சர்மா,**
அனைத்திந்திய ஸ்ரீ பகவத்பாத சிஷ்யர்கள் ஸபை,
49, லெக்ஷ்மிநாராயணபுர அக்ரஹாரம்,
மதுரை - 1.

[விலை **75** காசு

ஜனதா பிரிண்டர்ஸ், மதுரை.

सत्यमेव जयते नानृतं, सत्येन पन्था विततो देवयान:।
येनाक्रमन्ति ऋषयो ह्याप्तकामा : यत्र तत्सत्यस्य परमं निधानं ॥

தர்மத்திலும் ஸத்யத்திலும் விருப்பமுள்ளவர்கள் இதை கட்டாயம் 10 நபருக்காவது வாசித்துக் காண்பியுங்கள்.

சுபம்.

**M. E. சங்கரநாருயாண சர்மா,**
அனைத்திந்திய ஸ்ரீ பகவத்பாத சிஷ்யர்கள் ஸபை,
49, லெக்ஷ்மிநாராயணபுர அக்ரஹாரம்,
மதுரை-1.



ओं श्री :

श्री शंकराचार्य गुरुचरणारविन्दाभ्यां नम:

सत्यमेव जयते नानृतं

## அனந்தானந்தகிரி சங்கர விஜயம்.

**மதருஸ் யுனிவெர்ஸிடி வெளியீடு—1971.**



# ஸத்யான்வேஷணம்.

**M. E. சங்கரநாராயண சர்மா,**

அனைத்திந்திய ஸ்ரீ பகவத்பாத சிஷ்யர்கள் ஸபை,

49, லெக்ஷ்மிநாராயணபுர அக்ரஹாரம்,

மதுரை - 1.

[விலை 75 காசு

ஜனதா பிரிண்டர்ஸ், மதுரை.

ओं श्री :

श्री शंकराचार्य गुरुचरणारविन्दाभ्यां नम :

सत्यमेव जयते नानृतं

2|-11

# அனந்தானந்தகிரி சங்கர விஜயம்.

## மதராஸ் யூனிவெர்சிடி வெளியீடு—1971

## ஸத்யான்வேஷணம்.

---

நம் பாரத தேசத்தில் பிராசீன கிரந்தங்கள் பல இருக்கின்றன. அவற்றுள் முதல் இடம் பெற்றது வேதங்கள். இவை தொன்று தொட்டு குருவால் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யப்பட்டு, அத்யயன மூலமாக வந்து கொண்டிருப்பதில் ஹிமயம் முதல் குமரி வரையிலும் ஏட்டுப் பிரதிகளில் எழுதப் பட்டும், அச்சுயந்திரம் வந்த பிறகு அச்சிடப்பட்டும் பல லிபிகளில் (கிரந்தாக்ஷரம்-தேவநாகரி-தெலுங்கு முதலிய லிபிகளில்) இன்று வரை வந்திருப்பதும், ஒரே ரீதியில் பல பிரதேசத்தவர்களும் பாராயணம் செய்து கொண்டு வருவதும் கண்கூடு. அக்ஷரங்களிலாவது, ஸ்வரங்களிலாவது வித்யாஸமேயில்லையென்பது யாவரும் அறிந்த விஷயம். இரண்டாவதாக இடம் பெற்றது ஸ்ரீவால்மீகி-ராமாயணம். இதுவும் பல தேசங்களிலும் பல லிபிகளில் இருந்த போதிலும் தற்சமயம் பல அச்சாபீஸ்களிலும் அச்சிட்ட புஸ்தகங்களாக வந்துள்ளதில் ஆ-ஸேது-ஹிமாசலம் பாடத்தில் அதிகமாக வித்தியாசமில்லாதிருப்பதையே பார்த்திருக்கிறோம். மூன்றாவதாக இடம் பெற்றது வேத-வியாஸரின் மஹாபாரதம். இதே போல காளிதாஸாதி கவிகளின் காவ்யங்கள், நாடகங்கள், சம்பூக்கள் அனைத்தும் பற்பல பிரதேசங்களில் ஏட்டுப்பிரதியாக பண்டை காலத்திலிருந்து வந்து இன்று அச்சுப் புஸ்தகங்களாக வந்துள்ளதில் பாட பேதங்கள் கிடையாது. (நைஷதத்தில் ஓரிடத்தில் யாகேச்வர என்பதை "யோகேச்வர" என ஒரு சாரார் திருத்தம் கொடுக்க வேண்டுமென பிரயத்தினம் செய்தாலும் இன்னும் இந்த தவறுதலான திருத்தத்துக்கு நைஷதம் இடமாகவில்லை!) கடைசியாக ஆதிசங்கரரின் சரித்திரமான மாதவீய (வித்யாரண்ய) சங்கர விஜயம். இதுவும் இன்றுவரை பாட

பேதமில்லாமல் அச்சுப் புஸ்தகமாக வந்திருப்பது உலகமறிந்த உண்மை. (இதற்கும் ஓர் சாரார் முதலாவது ஸர்க்கத்தில் இரண்டு சுலோகங்களை திணிக்க வேண்டுமென முயற்சிப்பதை கீழே 4 வது பாராவில் காட்டப்படுகிறது')

2. இன்றையதினம், கால வேறுபாட்டில் ஓர் பெரியவருக்கு பெரிய யோகம் ஏற்பட்டு, மிகுந்த செல்வாக்கையும் ஸம்பாதித்து ஓர் பழையது போன்ற ஏடு தயாரித்து "பஞ்ச பாண்டவர்கள் வனவாஸம் செய்தது கதம்பவனத்தில் தான் என்பதாக எழுதி பல ஏடுகளை ஆ-ஸேது-ஹிமாசலம் உள்ள அனைத்து லைப்ரெரிகளிலும் திணித்து, பிரசாரம் செய்தும் இது உண்மையா? என்று கேட்டால் அதை ருஜுப்படுத்து வதற்கு "மதுரை மீனாக்ஷியம்மன் கோவிலில் பஞ்சபாண்டவர் களின் சிலைகளிருக்கிறதே" என சுட்டிக்காட்டி ஏட்டை ஸ்தாபித்து விடலாம். மேலும் "கிஷ்கிந்தா மலை, திருப்பரங் குன்றம் மலை தான்" ஏனென்றால் இந்த மலையில் ஸுக்ரீவன் அங்கதன், நளன், முதலிய வானரங்களின் வாரிசுகள் வஸிக் கின்றனவென்றும், மதுரை மீனாக்ஷியம்மன் கோவிலில் வாலி-ஸுக்ரீவர்களின் சிலைகள் கம்பத்தில் காணப்படுகின்றன என ஸ்தாபித்து விடலாம். இதை பலமுறை பல பேர்களைக் கொண்டு பலயிடங்களில் புஸ்தகங்கள் மூலமாகவும் உபன்யாஸ மூலமாயும் பிரசாரம் செய்யும்படியான செல்வாக்கு இருந்தால் போதும். ராமாயணம், மஹாபாரதம் இப்புஸ்தகங்களிலும் சில குறிப்புகளை மேல் காட்டிய விதமாய் எழுதச் செய்து விட்டால் போதுமானது. ஆனால் உண்மை யென்பது ஒன்றாகத்தான் இருக்க முடியும். உண்மைக்கு மாறு பாடு பலவாகயிருக்கும். எட்டும் எட்டும் பதினாறு என்ற ஸத்யமான விடை ஒன்றே!, பதினாறு என்பதை விட்டு விட்டு எந்த எண்ணைச் சொன்னாலும் சரியாகாது! ஒன்றன் பின்னால் வேறோர் எண் என திருத்தம் கொடுத்துக் கொண்டே முடிவு பெறாமல் போய்க் கொண்டிருக்கலாம். இது போலவேதான உண்மைக்கு புறம்பான அனைத்தும்!

3. மாதவீய சங்கர விஜயத்தில் முதல் ஸர்க்கம் 17 வது சுலோகத்தில், சங்கர விஜயத்தையும் அதன் கர்த்தாவான மாத

வரையும் பெருமையாகக் காட்ட வந்தயிடத்தில் व्यासाचल कविवर: என்பதான வாக்யம் வருகிறது. இதை ஒரு சாரார் எடுத்துக் கொண்டு ஷை வாக்யத்துக்கு ஷை சங்கர விஜயத் திலேயே வரும் வியாக்யானத்தைப் புறக்கணித்து விட்டு. வேறோர் அர்த்தத்தை நூதனமாக கற்பனை செய்து, வியாஸா சலர் என்ற ஒருவர் முன் காலத்தில் (மாதவருக்கும் முன்) ஓர் சங்கர விஜயம் செய்துள்ளது போல ஏட்டுப் பிரதிகள் முதலி யன தயாரித்தார்கள். அதை சர்க்கார் மூலம் வெளியிடச் செய்ய, போலகம் ஸ்ரீ ராம சாஸ்திரியள் பகீரத பிரயத்னம் செய்தார். 1954-ம் ஷூம் ஸ்ரீ சந்திரசேகரன் என்ற ஓர் சர்க்கார் உத்யோகஸ்தர் மூலம் (முகவுரையுடன்) வெளி வந்தது. சர்க்காரே பிரசுரித்துள்ளபடியால் ஜனங்கள் நம்பு வார்கள் என்ற எண்ணம். ஆனால் இந்த புஸ்தகத்தின் பிராமாண்யத்துக்கும், இதைச் செய்ததாக கூறப்படும் வியாஸாசலர் விஷயத்திலும் மறுப்புகள் ஏற்பட்டன. மறுப்பு களை ருஜூப்படுத்தும்படியான பல தப்பிதங்களும் (விட்டது-சேர்ந்தது) omissions and Commissions களும் எடுத்துக் காட்டப்பட்டன. வியாஸாசலீயத்துக்கு ஆதரவான பேச்சுக் கள் தற்சமயம் மறைந்துள்ளன. வியாஸாசலீய சங்கர விஜயம் பல தப்பிதங்கள் அடங்கியது என பலரும் உணர்ந்து கொள்ளும் விதத்தில் மறைந்து கிடந்த இந்த ஏட்டை பகிரங்கமாக பிரசுரம் செய்த ஸ்ரீ சந்திரசேகரனுக்கு நம் நன்றிகள் உரித்தாகுக!

4. இது மட்டுமல்ல. போலகம் ஸ்ரீ ராம சாஸ்திரியள் தெரிவித்துள்ளதாவது—(ஆதிசங்கரர் முதல் காஞ்சியில் தொடர்ந்துவரும் குரு பரம்பரை - 1964: பக்கம் 56) மாதவீய சங்கர விஜயத்தில் கீழ் காட்டியபடி 2 சுலோகங்கள் 1-வது சர்க்கத்தில் பழைய ஏட்டுச் சுவடிகளிலிருப்பது போலும் அவைகளை நீக்கிவிட்டு சங்கர விஜயம் அச்சிடப்பட்டிருப்ப தாயும் புகார் சொல்கிறார்:—

व्यासाचलप्रमुखपूर्वक पण्डित क्ष्माभृत्
संभृतोच्चतरकाव्यतरो : सुरीते : ।

विद्वन्मधुव्रत सुखोरु रसानि सर्वा—
ण्यादातुमर्थ कुसुमान्यहमक्षमो ऽस्मि ॥
यत्नादुदल्प धिषणा सृणिना गृहीतु
शक्यं तदत्र सरसं सकल गृहीत्वा ।
काञ्चिन्महेश्वर गुरुस्मृति भिन्नमोह ः
संक्षेपशंकरजय स्रज़मातनोमि ॥

இவை எந்த பிராசீன ஏட்டிலிருக்கின்றன என்பதை ஆராய்ச்சி செய்து பார்க்கவேண்டும். மாதவரின் சொல் நடைக்கும் மேல் காட்டிய சுலோகங்களின் சொல் நடைக்கும் வித்யாஸமிருப்பதை பண்டிதர்கள் உணர்வார்கள். இவை கல்பன சுலோகங்களெனவும் பழைய ஏட்டு பிரதிகளில் கிடையாது எனவும் யாவரும் அறிவார்கள். இந்த சுலோகங்களால் மாதவரே தனது சங்கர விஜயத்தில் வியாஸாசலசங்கர விஜயத்தைப் போற்றுகிறார் என யாவரும் நம்பட்டும் என்று போலகம் ஸ்ரீ ராம சாஸ்திரியளின் நோக்கம். இந்த கல்பன சுலோகங்களை இனிப் போடப் போகும் எந்த சங்கர விஜயத்திலும் பிரசுரகர்த்தர்கள் சேர்க்க இடம் கொடுக்கமாட்டார்களென நம்பப்படுகிறது. மாதவருடைய காலம் 14-வது நூற்றாண்டு. கல்பித வியாஸாசலரின் காலம் 1498—1507 AD என காட்டியிருக்கிறார்கள். (15.வது நூற்றாண்டின் இறுதி) பின் வந்த வியாஸாசலரின் கல்பித சங்கரவிஜயத்தை, முந்தியவரான மாதவர் புகழுவதற்கு வாய்ப்பு ஏற்படுமா என்பதையும் வாசகர்களே தீர்மானிக்க வேண்டும்! வியாஸாசல சங்கர விஜயத்தில் பல முக்யமான சரித்ரங்களும் ஸம்பவங்களும் விடப்பட்டிருப்பதுடன், மாதவீய சங்கர விஜயத்திலுள்ள கணக்கற்ற சுலோகங்களை சேர்த்துக் கொண்டிருப்பதையும் பலபிரகாரமாக எடுத்துக் காட்டிய பின் இந்த வியாஸாசலீய சங்கர விஜயம் போலகம் ஸ்ரீ ராம சாஸ்திரியளுடன் மறைந்து விட்டது. ஷெ சங்கர விஜயத்தைப்பற்றி ஸ்ரீ V. A. தேவ ஸேனுபதியும் Dr. மஹாதேவனும் பிரஸ்தாபிப்பதை விட்டு விட்டார்களென்பது இன்றைய நிலை!

5. மாதவீய சங்கர விஜயத்தில் 1-வது ஸர்க்கம் 2-வது சுலோகத்தில் शांकर वाक्यसार: என்ற பதம் வருகிறது. இந்த யிடத்தில் ஓர் வியாக்யானக்காரர் शांकर–आनन्दगिर्यभिधः तस्य तत्प्रशिष्यस्य वाक्यसार: என அர்த்தம் கொடுத்திருக்கிறார். மற்றோர் வியாக்யானக்காரர் प्राचीनशंकर जये उदाहृतानां शांकरवाक्यानां என்ற விளக்கம் கொடுத்திருக்கிறார். இதிலிருந்து ஆனந்தகிரி யென்ற சங்கரசிஷ்யரின் ப்ரசிஷ்யர் ஓர் சங்கர விஜயம் எழுதியிருக்கிறார் என ஏற்படுகிறது. ஆனால் அடுத்து வரும் மாதவரின் 3 வது சுலோகத்தில் மேல்கண்ட சங்கர விஜயம் காவ்ய நடையில் தான் உள்ளது, என்பதை மாதவர் प्राक्कवि हृद्यपद्येषु என்ற பதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். ஆகவே இந்த ஆனந்தகிரி சங்கர விஜயம் காவ்ய நடையில் தான் உள்ளது என தீர்மான மாகிறது.

6. மாதவீய சங்கர விஜயம் 15 வது ஸர்க்கம் முதலாவது சுலோகத்தின் வியாக்யானத்தில் प्राचीनानुरोधेन என்ற பதத்தை உபயோகப்படுத்தி श्रीशंकराचार्यमध्यार्जुनं नाम என்று ஆரம்பித்து रामेश्वरं प्रति जगाम என்ற வரையில் கத்ய நடையில் (வாக்கியங்களாக) ஓர் சங்கர விஜயத்தின் பாகத்தை காட்டியிருக்கிறார். 15 வது ஸர்க்கம் ஐந்தாவது சுலோகத்தின் வியாக்யானத்திலும் अत्रेदमव धेयं என குறிப்பிட்டு परमगुरुः शंकराचार्य...शुद्धाद्वैत विद्याश्रिताः बभूवुः என்று காஞ்சியில் ஒரு மாத காலமட்டிலும் வசித்து அங்கே செய்துள்ள கார்யங்களை கத்ய ரூபமாக (வாக்கிய நடையிலேயே) சங்கர விஜயத்தின் பாகம் காட்டப்படுள்ளது. 15 வது ஸர்க்கம் கடைசி சுலோகத்துக்கு வியாக்யானம் செய்யும் போது इत्थं अद्वैत स्थापनानन्तरं என ஆரம்பித்து आज्ञापयामास । इति प्राचीनादवगम्यते என்று ஷண்மத ஸ்தாபன. விஷயத்திலும் ஓர் கத்ய ரூபமான (வாக்ய நடையிலுள்ள) கதாபாகம் கூறப்படுகிறது. இவ்வித மாக வாக்ய நடையிலேயே உள்ள ஓர் பிராசீன சங்கர விஜயம் வியாக்யானக்காரர்களுக்கு மட்டிலும் கிடைத்து அதன் பாகங் களை குறிப்பிட்டிருக்கிறார்கள்.

7. சங்கர விஜயம் 15 வது ஸர்க்கம் 2 வது சுலோகத்திற்கு வியாக்யானம் செய்யும்போது வியாக்யானக்காரர் तथाहि என்று ஓர் சங்கர விஜயத்தை எடுத்துக்கொண்டு तत्रस्था: गुरुशेखरं என்று ஆரம்பித்து सर्वपापैर्विहीना : என்று முடியும் வரை 58 சுலோகங்கள் கொடுத்துள்ளார். மாதவீயம் 15 வது ஸர்க்கம் 4 வது சுலோகத்திற்கு வியாக்யானம் செய்யும்போது வியாக்யானக்காரர் इदमत्र अवधेयं என தொடங்கி रामेश्वरं रामकृत प्रतिष्ठं என்றது முதல் 49 சுலோகங்களும் अद्वैतवादिन : என்றது முதல் इत्युक्त आचार्यवर्यो என்று முடியும்வரை 353 சுலோகங்கள் பழைய சங்கர விஜயத்திலிருந்து மேற்கோளாக காட்டியிருக்கிறார். மாதவியம் 15 வது ஸர்க்கம் 28 வது சுலோகத்துக்கு வியாக்யானம் செய்யும்போது வியாக்யானகாரர் अत्रेद मवधेयं என தொடங்கி संहार भैरवं என்ற சுலோகம் முதல் शिष्यवरा बभूवु : என்றவரை 351 சுலோகங்களை மேற்கோளாக காட்டியிருக்கிறார். இந்த 7 வது பாராவில் காட்டப்பட்ட மேற்கோள்கள் அனைத்தும் சுலோக ரூபமாகவே யிருப்பதால், காவ்யம் என ஸந்தேஹமறத் தெரியவருகிறது. இவை மட்டும்தான் மாதவீயம் 1 வது ஸர்க்கம் 3 வது சுலோகத்தில் குறிப்பிட்டுள்ள प्राक्कवि ह्यपद्येषु என்ற பதத்தால் மாதவரால் குறிப்பிடப்பட்டு, மதுரமான பிராசீன கவிகளின் ரஸத்தோடு எனது காவ்ய ரஸத்தையும் மாற்று ருசியேற்படுத்தும் பொருட்டு சேர்த்துக் கொள்ளவேண்டுமென கூறுகிறார் என்று ஒருவாறு நம்ப இடமளிக்கிறது. இதையே குருவம்ச காவ்யத்திலும் குறிப்பிட்டுள்ளதாக கருத இடமளிக்கிறது.

8. இவ்விதம் வியாக்யானக்காரர்கள் மேற்கோளாக காட்டுவதிலிருந்து, கத்ய (வாக்ய) ரூபமான ஓர் சங்கர விஜயமும் (சுலோக) ரூபமான ஓர் சங்கர விஜயமும் இரண்டு வெவ்வேறு பிரகாரங்களாக இருந்தன என்பது தெளிவு. மாதவர் கூறுவதிலிருந்து பத்ய ரூபமான சங்கர விஜயம்தான் தெரியவருகிறது. வியாக்யானக்காரர்களின்படி வாக்ய ரூபத்தில் ஒன்றும் சுலோக ரூபத்தில் ஒன்றும் ஆக இரண்டு சங்கர விஜயங்களிருந்திருப்பதாய் வியாக்யானம் செய்த காலத்தில் பார்த்திருப்பதாய் அறியப்படுகிறது. ஆனால் சம்பூரூபத்தில் (சுலோகமும்,

வாக்யமும் கலந்த உருவத்தில்) ஒரு சங்கர விஜயமும் இருந்ததாக அவர்கள் குறிப்பிடவில்லை. இருந்திருக்கும் பக்ஷத்தில் மாதவராவது, வியாக்யானக்காரர்களாவது ஸ்பஷ்டமாக "விஜய சம்பூ" என்றே குறிப்பிட்டுக் காட்டியிருக்க வேண்டும். அப்படிக் கூறவில்லை. மேலும் வியாக்யானகாரர்கள் எடுத்துக் காட்டிய பல பாகங்களில், எது ஆனந்தகிரியால் செய்யப் பட்டது என இரு வியாக்யானக்காரர்களும் தெளிவு படுத்தவில்லை. இதை மாதவரோ, வியாக்யானக்காரரோ பிரித்துச் சொல்லாதபடியால் "இன்றைய தினத்தில்" நாம் கலந்த கட்டியாக எல்லாவற்றையும் கதம்பமாக்கி, ஆனந்தகிரி செய்தது என்ருவது ஆனந்தஞானக்ய ஆனந்தகிரி செய்தது என்ருவது, பிராசீன சங்கர விஜயம் என்ருவது ப்ருஹத் சங்கர விஜயம் என்ருவது குறிப்பிடுவதற்கு இயலாத நிலைமையிலுள்ளோம். சங்கர விஜயம் முன் காலத்தில் சம்பூரூபமாக இல்லையென்பதும் தீர்மானமாகிறது.

9. மாதவீயம் 16 வது ஸர்க்கம் 103 வது சுலோகத்தில் ईशावतारं என்று சங்கரர் வர்ணிக்கப்படுகிருர். சங்கரர் ஈச்வரரின் அவதாரம் என்பதை நிரூபிப்பதற்காக வியாக்யானகாரர், சிவரஹஸ்யம் 9 வது அம்சம் 16 வது அத்யாயத்தில் 46 சுலோகங்களை மட்டிலும் குறிப்பிட்டு மேற்கோளாக காட்டுகிருர். வியாக்யானத்தில் காட்டியபடி 7 வது சுலோகத்தில் ஈச்வரரின் வாக்யமான मदंश जातं என்றும், 14 வது சுலோகத்தில் सृजामीशो मदंशजं என்பதாகவும் 38 வது சுலோகத்தில் मदंशस्त्वं सुजातोऽसि என்பதாகவும் 40வது சுலோகத்தில் संजातो ऽसि मदंशत : என்பதாகவும் கூறப்பட்டுள்ளதால் இவைகளிலிருந்து "ஈச்வரனுடைய அவதாரமே" சங்கராசார்யர் என எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. சங்கரர் ஈசாவதாரம் என காட்டுவதற்கு, சிவரஹஸ்யம் 16 வது அத்யாயத்தில் எந்த அளவு காட்ட வேண்டுமோ, அந்த அளவே காட்டப்பட்டிருப்பதுடன், அந்த அத்யாயத்திலுள்ள பாக்கி சுலோகங்கள் காட்டப்படவில்லை. இந்தக் கதை बृहच्छंकरविजये एव श्रीमदानन्दज्ञा-नाख्य आनन्दगिरि विरचिते द्रष्टव्यमिति दिक् । என்று கூறுகிருர். ஆகவே முதல் ஸர்க்கத்தில்

வியாக்யானத்தில் கூறப்பட்ட ஆனந்தகிரி வேறு என்றும் 16 வது ஸர்க்கத்தில் வியாக்யானத்தில் கூறப்படும் ஆனந்தஞானக்கிய ஆனந்தகிரி வேறுஎன தெரிய வருவதுடன் பின் காட்டப்பட்டவரால் தான் பிருஹத் சங்கர விஜயம் எழுதப்பட்டது எனவும் தெரியவருகிறது. சிவரஹஸ்யத்தைப் பின்னால் ஓர் பாராவில் விவரமாய் எழுதப்படும். ஆனால் மேல் காட்டப்பட்ட எந்த விதமான சங்கர விஜயமும் (1) சுலோக ரூபமாகவோ, (2) வாக்ய ரூபமாகவோ, (3) ஆனந்தகிரி சங்கர விஜயமோ (4) ஆனந்த ஞானக்ய ஆனந்தகிரி சங்கர விஜயமோ இன்றைய தினத்தில் ஏட்டுப்பிரதி ரூபத்திலாவது. அச்சுப்பிரதி ரூபத்திலாவது கிடையாது என்பது நிச்சயம்.

10. ஆனால் கும்பகோணம் மடம் ஸ்வாமிகள் காஞ்சி காமாட்சியம்மன் கோவில் டிரஸ்டியாக நியமனம் ஆனபின் (1842 A D) காஞ்சி மடம் உண்டு என பிரசாரம் செய்ய பற்பல சங்கரவிஜயங்களை ஷை மடம் கல்பனை செய்துள்ளது. மாதவீய மூல சுலோகம், வியாக்யானகாரர்களின் மேற்சோள்கள் இவைகளைப் பார்த்து விட்டும், தற்சமயம் அவைகளில் சுட்டிக் காட்டப்பட்ட சங்கர விஜயங்கள் இல்லாத படியாலும், பிராசீனம் போல சொல்லிக் கொண்டு சங்கர விஜயங்களை ஸ்ருஷ்டி செய்துள்ளது. அதில் ஒன்று வியாஸாசலீயம் என முன்னமேயே கூறப்பட்டது. 1954ம் வருஷத்தில் அச்சு புஸ்தகமாய் சர்க்கார் வாயிலாக தோன்றியது. மற்றொன்று அனந்தானந்தகிரி சங்கர விஜயம் என்பது மதராஸ் சர்வகலாசாலை மூலம் 1971 ல் தற்சமயம் வெளியாகியுள்ளது. சர்க்கார் வாயிலாக வந்தபடியால் இதன் பிரமாணத்துக்கு மறுப்பு இராது, என்ற எண்ணமாய் இருக்கலாம். இது சம்பூ (வாக்யமும் சுலோகமும் கலந்த) ரூபமாக வந்திருக்கிறது. சில பாகங்கள் மட்டும் மாதவீய வியாக்யானத்தில் உள்ள வாசகங்களுடனும் பெரும்பாலான பாகங்கள் புதிதாக கல்பனை செய்யப்பட்டு ஷை வியாக்யானகாரர்கள் குறிப்பிட்ட வாசகங்களின் கருத்தை உள்ளடக்கிக் கொண்டும் இருந்து கொண்டிருக்கிறது. மாதவீய வியாக்யானகாரர்கள் கொடுத்துள்ள பூரா சுலோக வாக்யங்களை அப்படியே காபியடித்து அந்த சுலோகங்களுக்குள் கூறப்படாத கதா பாகங்களை மட்டிலும்

கல்பனை செய்து இந்த புஸ்தகம் வெளியாகி யிருந்தால் யாவரும் பார்த்து விட்டு இது சுத்தமான பிராசீன சங்கர விஜயம் தானே எனக்கருதி இதற்கு மறுப்பு கொடுக்க இயலாம லேயே போயிருக்கும். நல்ல வேளையாக, பூராவும் காபி யடிக்காமல், வாசகங்கள் கல்பிக்கப்பட்டிருப்பதால் தான் புஸ்தகத்தை படிக்கும் போதே பல அபத்தங்கள் தெரிவது டன், பதிப்பாளரும் ஆங்காங்கு உள்ள அபத்தங்களை சுட்டியும் காட்டியிருக்கிறார்! இது முன்னம்பல ஏட்டுப் பிரதிகளிலிருந்ததாக பதிப்பாளர் வர்ணிக்கிறார். கல்கத்தா விலும், மதராஸிலும், 19-வது நூற்றாண்டில் அச்சுப் புஸ் தகங்களாக வெளிவந்துள்ள பாடங்களும் அடங்கியிருப்பதா யும், சில வேறுபாடுகளிருப்பதாயும் கூறுகிறார். சுமார் 10-க்கு மேல் 15 பிரதிகள் வரை கிடைத்து அவைகளை பரி சீலித்து (எந்த விதத்தில் கும்பகோணம் - காஞ்சிக்கு அனு கூலமாகுமோ அந்த விதத்தில்) இப்பொழுது (1971 ஹூல்) அச்சிட்டிருப்பதாய் பதிப்பாளர் (Dr. வீழிநாதன் M.A. Phd) சொல்கிறார். எத்தனை ஏட்டு பிரதிகள் உள்ளதோ அத்தனை பாட பேதங்களுமிருப்பதாகவே இப்புஸ்தகத்தின் முகவுரை யிலும் ஆங்காங்கு கொடுக்கப்பட்ட குறிப்புகளிலும் கடைசி யிலுள்ள பிழை திருத்தங்களிலும் பதிப்பாளர் காட்டியிருக் கிறார். இதற்கு பதிப்பாளருக்கு நன்றி செலுத்த கடமைப் பட்டுள்ளோம்! ஏனெனில் காலம் மாற மாற. ஆங்காங்கு அபிப்பிராயங்கள் மாற மாற, புதிய கல்பனைகள் தோன்ற தோன்ற, முந்தின பிரதிகளில்லாத புதிய கதாபாகங் களுடன் புதிது புதிதான பிரதிகள் எழுதப்பட்டுள்ளன என்பது தெளிவாய் தெரியவருகிறது. ஆதிசங்கரர் சிதம் பரத்தில் தான் பிறந்தார் என பழைய ஏடுகள்! அவரு டைய தாயார் விசிஷ்டா என்பவளாம்! தகப்பனார் விச்வஜித் என்பவராம்! விச்வஜித் தன் பார்யையை, மகா பதிவிரதையாக இருந்தபோதிலும் தியாகம் செய்துவிட்டு தபஸ் செய்ய காட்டுக்குப் போய்விட்டாராம்! பர்த்தாவிட மிருந்து பிரிந்த விசிஷ்டா சிதம்பர மஹேச்வரரை பூஜை தியானம், முதலியவற்றால் ஸந்தோஷப்படுத்தினாளாம்! சிதம்பரேசர் அவளுடைய வதன பங்கஜ மார்க்கமாக பிர

வேசித்தாராம்! அவள் கர்ப்பம் தரித்து சங்கரரை பெற்றாள்! இது சங்கராவதார கதை! இப்படியே 19-ம் நூற்றாண்டில் அச்சான புஸ்தகங்களிலே வர்ணிக்கப்பட்டுள்ளது, அனந்தானந்தகிரி சங்கர விஜயத்தில்! இந்த அவதார கதை அடங்கின ஏட்டு பிரதி சங்கர விஜயத்தை-பிராசீனமாயுள்ளதை-பார்த்து விட்டு மாதவர் சங்கர—விஜயம் எழுதினார் என प्राक्तवि हृप्यचेषु என்ற பதத்தால் தெரியவருகிறதென) கருதினால், மாதவர், காலடியில் சங்கராவதாரம் ஏற்பட்டதாயும், அவருடைய மாதா பிதாக்கள் ஆர்யாம்பாள் சிவகுரு எனவும், தம்பதிகளிருவரும் தவம் செய்து புத்ரனை பெற்றார்களெனவும் எழுதி யிருப்பாரா? இதற்கு வியாக்யானம் செய்தவர்கள் இவ்விடத்தில் வியாக்யானம் செய்யும்போது (வேறுயிடங்களில் மேற்கோளாக காட்டியது போல) சிதம்பரத்தில். விசிஷ்டாவுக்கு சிதம்பரேசரின் அனுக்ரஹத்தால் சங்கரர் பிறந்தார் என்று பிராசீன சங்கர விஜயம் கூறுகிறது என எடுத்துக்காட்டாமல் விட்டிருப்பார்களா? ஆகவே, மாதவர் கூறும் பிராசீன விஜயமோ, அல்லது வியாக்யானகாரர்கள் எடுத்துக்காட்ட கையாண்ட சங்கர விஜயங்களோ, இன்று கும்பகோணம் மடத்தார் ஆதாரமாகக் கொண்ட அனந்தானந்தகிரி சங்கர விஜயமல்ல என்பது மிக மிக தெளிவு. ஆகையால் முதலிலேயே கோணலாக உள்ள இந்த சங்கரவிஜயம் முடிவிலும் கோணலாகத் தான் இருக்க முடியும் என்றே நம்ப இடமளிக்கிறது.

சிருங்கேரி மஹாஸ்வாமிகள் ஸ்ரீ சச்சிதானந்த சிவாபிநவ ந்ருசிம்ஹ பாரதீஸ்வாமிகள், ஆதிசங்கரரின் ஜன்மபூமியான, காலடியை கண்டு பிடித்து, அங்கே சரித்ர ரீதியாக நதீதீரத்திலுள்ள சங்கரரின் க்ருஹம், ஆர்யாம்பாளின் தகன ஸ்தலம், கிருஷ்ணன் கோவில், ஸ்வர்ணவர்ஷம் ஏற்பட்ட பிராம்மணியின் க்ருஹம் முதலியவற்றை கண்டுபிடித்து, அங்கே சங்கராலய பிரதிஷ்டையையும், கும்பாபிஷேகத்தையும் 1910ஞ் ல் நடத்தி வைத்த பிறகும், சங்கரரின் ஜன்ம பூமி "சிதம்பரம் என்றும் தாயார் தகப்பனார் வசிஷ்டா-விச்வஜித் என்றும் கூறினால் அத்தைப் பாட்டி கூட நம்பமாட்டாள்

என்ற ஓர் நிலைமை நம் நாடு பூராவும் ஏற்பட்டதால் புதிய ஏடுகள் தயாரிக்கப்பட்டன (நெரூர் முதலிய இடங்கள் போய்ச் சேர்ந்தன என்று சொன்னால் மிகையாகாது). புதிய ஏடுகளில் மட்டிலும், காலடியில் சிவகுரு-ஆர்யாம்பாள் தம்பதிகளுக்கு சங்கரர் புத்திரராக அவதரித்தார் என்ற உண்மை வெளி வந்தது. இன்றும் பழைய ஏடுகளில், பழைய கட்டுக் கதையான, சிதம்பரம்-விச்வஜித்-வசிஷ்டா என்றது இருந்து கொண்டிருப்பதை பதிப்பாளர் குறிப்பில் காட்டியிருப்பதற்கு பாராட்டுகிறோம்.

11. அடுத்தபடியாக சங்கரர் சிதம்பரத்திலேயே ஸன்யாஸம் பெற்றுக்கொண்டதாயும், சிதம்பரத்திலேயே வஸித்து வந்த கோவிந்த பகவத் பாதரிடம் உபதேசம் பெற்றுக் கொண்டதாயும் பழைய ஏடுகள் கூறும் கதை! காலடியில் சங்கரர் அவதரித்தார் என்று புதிய ஏடுகள் தயாரித்துள்ளதில் மட்டும் நதியில் சங்கரரை முதலை பிடித்துக்கொண்டதாயும் ஆபத்ஸன்யாஸம் வாங்கிக்கொண்டதாயும் காலடியிலிருந்து சிதம்பரம் வந்து சேர்ந்து கோவிந்த பகவத் பாதரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டதாயும் மாற்றியமைக்கப்பட்டன. ஆகையால், ஆதிசங்கரர் சிதம்பரத்தில் கோவிந்த பகவத் பாதரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டார் என்பதை நாம் இந்த சங்கர விஜயத்தால் நம்ப வேண்டும்! இந்த சங்கர விஜயத்தை பார்த்து விட்டு மாதவர் சங்கர விஜயம் எழுதும் போது. शांकर वाक्य सारः संगृह्यते என்று எழுதியவர் ஏனோ மாறுபாடாக நர்மதாதீரத்துக்கு கோவிந்த பகவத் பாதரையும். சங்கரரையும் உபதேசத்தையும் கொண்டுபோனார் என்பது புரியாத விஷயமாக இருக்கிறது உண்மை என்ன வெனில் சிதம்பரம்-காஞ்சி முதலிய இடங்களுக்கு ப்ராதான்யம் கொடுத்து எழுதிய இந்த அனந்தானந்த கிரி சங்கர விஜயம் மாதவர் காலமான 14ம் நூற்றாண்டுக்கு பிற்பட்டது. (இதை 18 வது பாராவில் காட்டப்படும்) ஆகையால் இந்த சங்கர விஜயத்தை மாதவர் பார்த்திருக்க முடியாது என்பதுதான் உண்மை.

12. அனந்தானந்தகிரி சங்கர விஜயம் 55 வது பிரகரணத்தில் முதல் பதிப்பில், சங்கரர் கேதாரம் குருக்ஷேத்ரம், பதரீ முதலிய இடங்களுக்கு சென்றார் என்பதாக மட்டிலும் காணப்படுகிறது. ஐந்து லிங்கங்களின் கதை அந்தப் பழைய ஏட்டிலில்லை. கும்பகோணம் மடத்தார்களுக்கு சிவரஹஸ்யத்தின் 16 வது அத்யாயத்தில் ஓர் பாகத்தை பார்த்தபின ஓர் யோசனை தோன்றிற்று. ஐந்து லிங்கங்களை பரமேச்வரசிடமிருந்து பெற்றார் என்று சிவ ரஹஸ்யத்திலிருக்கிறது. மலடிமகன் போல ஒருவருக்கும் அகப்படாத "மார்க்கண்டேய ஸம்ஹிதை" யிலும் இந்தக் கதை கூறப்பட்டுள்ளதாம்! ஆகையால் இந்த ஐந்து லிங்கங்களைப் பற்றிய கதையையும் சேர்த்தால்தான், கும்பகோணம் மடத்தில் பூஜையிலிருக்கும் ஸ்படிகலிங்கத்துக்கு ஓர் பெருமையும் மதிப்பும் ஏற்படும். ஆகவே இந்த சரித்திரத்தையும் சேர்த்து ஓர் நூதன ஏடு தயார் செய்யப்பட்டது. இவ்விதம் முன் பதிப்பில் காணப்படாத நிலையில், புதிய பதிப்பில் பரமசிவனிடமிருந்து, சங்கரருக்கு ஐந்து லிங்கங்கள் கிடைத்ததாயும், ஒன்று கேதார க்ஷேத்ரத்திலும், ஒன்று நீலகண்ட க்ஷேத்ரத்திலும் ஒன்று சிருங்கேரியிலும், பிரதிஷ்டை செய்து ஒன்று காஞ்சியிலும் ஐந்தாவது லிங்கத்தை சிதம்பர க்ஷேத்ரத்தில் சேர்க்கும்படி ஸுரேச்வரரை ஆஞ்ஞை யிட்டதாயும் புதிய ஏட்டில் காண்பித்தது அந்தப்படியே, இப்பொழுது பதிப்பிக்கப்பட்ட சங்கர விஜயத்தில் காட்டப்பட்டுள்ளது. இந்தக் கதையை மாதவீய சங்கர விஜயத்தில் மாதவர் கூற விட்டுவிட்டார் போலும்! சித்விலாஸிய சங்கர விஜயத்தில், கீழ் காணும் சுலோகத்தின்படி "சந்திர மௌளீச்வர லிங்கத்தையும், ரத்ன கர்ப்பகணபதியையும் கோவிந்த பகவத் பாதர் சங்கரருக்கு கொடுத்தார் எனக் கூறப்பட்டுள்ளது.

इत्युक्त्वा चन्द्रमौलीशं रत्नगर्भं गणाधिपं । शिवात्कमादिहायातं ददौ तस्मै स देशिक: ॥ चिद्विलासीय 9-52

இந்த சந்திர மௌளீச்வர லிங்கமும் ரத்னகர்ப்ப கணபதியும், சிருங்கேரி ஜகத்குருவால் லோக க்ஷேமார்த்தம் இன்றும் பூஜிக்கப்பட்டு வருகிறது என்பது உலக பிரசித்தம்.

சிதம்பரத்தில் பூஜை செய்யப்பட்டு வரும் சந்திர மௌளீச்வர லிங்கம், ஸுரேச்வரரால் அங்கு சேர்ப்பிக்கப்பட்டது தானா? என்பதை சிதம்பரம் தீக்ஷிதர்களை கேட்டால் உண்மை விளங்கும். கும்பகோணம் மடத்தில் பூஜிக்கப்பட்டு வந்த பூஜா சாமான் அனைத்தும் ஸ்படிகலிங்கம் உள்பட 1934-35 வருஷத்தில் காசியில் சோரம் போய் விட்டதாய் ஸ்ரீ J.V.ராஜகோபால சர்மா (காசியில் வசித்து வந்தவர்) தன் 'சங்கரமட விமர்சனம்' என்ற புஸ்தகத்தில் எழுதியிருக்கிறார். அப்படியானால் தற் சமயம் கும்பகோணம் மடத்தில் பூஜை செய்யப்பட்டு வரும் லிங்கம் "பரமேச்வரன் ஆதிசங்கரருக்கு கொடுத்த லிங்கங்களில் ஒன்றா?" என்பதை விசாரித்து உண்மையை விமர்சனம் செய்ய வேண்டியது வாசகர்களின் பொறுப்பு.

13 அடுத்தபடியாக, காஞ்சியில் ஆசார்யாள் ஒரு மாத காலம் மட்டும் வஸித்தார் என்ற ஒரு சரித்ர பாகத்தை मासमात्रं स्थित्वा என்ற பதத்துடன் வியாக்யான கர்த்தா மாதவீய சங்கர விஜயம் 15வது ஸர்க்கம் 4வது சுலோகத்தின் வியாக்யானத்தில் மேற்கோளாக காட்டியிருக்கிறார். அதன் பிறகு (ஒரு மாதத்திற்கு பிறகு) பற்பல இடங்களுள் காச்மீரம் கேதாரம், வரை ஆதிசங்கரர் விஜய யாத்திரையாக சென்ற கதை மாதவீய சங்கர விஜயம் எடுத்துக் காட்டுவதுடன் வியாக்யானக் காரரும் துயர்ந்து வியாக்யானம் செய்து வருகிறார். मात्रं சப்தத்தை குறிப்பாக கவனிக்கவும். இதே பதத்தை அனந்தானந்தகிரி சங்கர விஜயத்திலும் 184ம் பக்கத்தில் 63ம் பிரகரணத்தில் உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. அனந்தானந்த கிரியின் சங்கர விஜய பிரகாரமாயும் मासमात्रं ஒரு மாதம் மட்டும் தான் சங்கரர் காஞ்சியில் வஸித்தார் என கண்டோக்தியாக கூறப்பட்டுள்ளது. (இதே சங்கர விஜயத்தில் இதே 63ம் பிரகரணத்தின் ஆரம்பத்தில்-பக்கம் 183-சிருங்கேரியில் 12 வருஷ காலம் வஸித்தார் என ஸ்பஷ்டமாக கூறியிருப்பதையும் கவனிக்கவும்) காஞ்சியிலிருந்து ஒரு மாத காலத்துக்குப்பின் வேறுயிடங்களுக்கு சென்றதாக அனந்தானந்தகிரி சங்கர விஜயத்தில் கூறப்படவில்லை. இந்த ஒரு மாத காலத்துக்குள், சிவகாஞ்சீ நிர்மாணம், விஷ்ணு காஞ்சி நிர்மாணம் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை,

ஸ்வம்டஸ்தாபனம், 7 சிஷ்யர்களைக் கொண்டு பல திசைகளுக்கும் அனுப்பி ஷண்மத ஸ்தாபனம், அந்த சிஷ்யர்களும் (உடுப்பியில் கிருஷ்ண பிரதிஷ்டையுள்பட) ஷண்மத ஸ்தாபனத்தை முடித்து விட்டு காஞ்சிக்கு திரும்ப வந்து குருவை ஸ்தோத்ரம் செய்தல் காஞ்சியிலேயே சங்கரரின் ஸச்சிதானந்த ஐக்யம், இவ்வளவு சம்பவங்களும் நடைபெற்றதாக கதை! இந்தப் புழுகு கந்த புராணத்திலுமில்லையென நாஸ்தீகர்களின் பழமொழி போல, இவ்வளவு சம்பவங்களும் காஞ்சியில் வசித்த ஒரு மாத காலத்துக்குள் நடைபெற்றது என்பதை நாம் நம்ப வேண்டும்! இதர சம்பவங்கள் நடைபெற்றிருக்கலாம் என நம்ப இடமிருந்தாலும் காஞ்சியிலிருந்து 7 சிஷ்யர்கள் ஒரே மாத காலத்துக்குள் ஸேது-ஹிமாசலம் வரை, பல தேசங்கள் சென்று (பாஷ்ய ரசனையுள்பட - கிருஷ்ண பிரதிஷ்டை உள்பட) ஷண்மத ஸ்தாபனம் செய்துவிட்டு, அதே ஒரு மாதத்திற்குள் காஞ்சிக்கே திரும்பி வந்து குருவை ஸ்தோத்ரம் செய்தார்கள் என்பதை எந்த பிரகாரத்தாலும் நம்ப இயலவில்லை! இதை வாசகர்கள் மனதுக்கு வேலை கொடுத்து ஆராய்ச்சி செய்ய வேண்டிய விஷயம். ஆகாச மார்க்கமாய் ஸஞ்சரிக்க வல்லமையுள்ள அஞ்ஜநேய ஸ்வாமியும் லங்கையில் ஸீதையை தேடிவிட்டு ராமரிடம் தெரியப்படுத்த ஸுக்ரீவன் கொடுதத ஒரு மாத தவணை காலம் தாண்டிவிட்டது என ராமாயணம் கூறுவதை வாசகர்களுக்கு ஞாபகமூட்டுகிறேன்.

14. தவிரவும், ஷண்மத ஸ்தாபன சரித்ரத்தை விஸ்தாரமாக கூறிய அனந்தானந்தகிரி சிருங்கேரியிலும் காஞ்சியிலும் மட்டிலும் மடங்களை ஸ்தாபித்த கதையை கூறிய போதிலும், என்ன காரணம்பற்றி துவாரகையிலும் பூரியிலும் பதரியிலும் ஆம்நாய பீடங்களை ஸ்தாபித்த சரித்ரத்தை கூற விட்டுவிட்டார் என புலப்படவில்லை. அனந்தானந்தகிரி கூறவிட்டதை (Supplying the omission) சேர்த்தல் என்ற முறையில் Dr. மஹாதேவன் தன் முகவுரையில் இவ்விதம் எடுத்துக்காட்டுகிறார்:— In the different parts of the country Sankara established monastic centres

and charged his principal disciples to head them so that in each centre there could come into being an unbroken succession of Advaita preceptors· (பக்கம் (xvii முகவுரை) எந்தயிடங்களில் மடங்கள் ஏற் படுத்தப்பட்டன, என்பதாகவாவது யார் யார் பிரதான சிஷ்யர்கள் என்பதாகவாவது அவர்களுள் யார் எந்த மடத்துக்கு நியமிக்கப்பட்டார் என்பதாகவாவது சரித்ரத் தில் கூற விட்டுப் போனதை Dr. மஹாதேவன் காட்டாமல் போனாலும் இந்த அம்சம் சரித்ரத்தில் விட்டுப் போய்விட்டது என்பதைக் கூறாமல், முகவுரையில் பட்டவர்த்தனமாக சுட்டிக் காட்டியதற்கு அவருக்கு நம் பாராட்டுகள் உரித் தாகுக! ஆனால் காஞ்சியில் ஒரு மாத காலம் மட்டும் வாஸம் செய்த சங்கரர் வடக்கே பலயிடங்களுக்கு சென்றார் என்றும் காச்மீரத்தில். ஸர்வஞ்ஞ பீடம் ஏறினார் என்றும் மாத வீய சங்கர விஜயம் எடுத்துக் காட்டுவதை கவனித்தால், சிவ ரஹஸ்யத்தில் 46 வது சுலோகத்துக்குப் பிந்திய பாகத்தில் வர்ணித்துள்ள சரித்திரத்தையும் கவனித்தால், காஞ்சியில் மடம் ஏற்படுத்தவில்லை யென்பதும் அவர் அங்கே தேக வியோகமடையவில்லை யென்றும் நன்கு விளங்குகிறது.

15. சிவரஹஸ்யத்தின் பின் பகுதி கீழே கொடுக்கப் படுகிறது:—

काञ्च्यां तपस्सिद्धिमवाप्य दण्डी चण्डीश-रूपो जगदाकलय्य।
ब्रह्मै यविद्यां रचयन्स भाष्यं शारीरकं नाम जगाद मोदात् ॥
व्यासेन संभाष्य समेत्य काशीं तं मण्डनार्यं परिखण्ड्य वाणीं।
जेतुं शरीरान्तरमेत्य कामकलां जगाहे प्रमदावराभ्य : ॥
पुन: स्वकं देहमवाप्य तूर्णं पूर्णं निजं काममथाकलय्य।
वाणीं स जित्वैव तु तां मठे स्व शृंगेरिकारण्ये प्रणिवेश्य तुष्ट:॥
कापालिकं तं क्रकचं महोग्रं कर्णाटदेशे निखिलं विजित्य ।
गोकर्णमासाद्य तमीशमीड्यं स्तुत्वा महाराष्ट्र पद प्रपेदे ॥
तत्र स्थितान्भास्करभट्टमु ख्यानन्तनीलकण्ठं च तूणीकरिष्यन्।

काश्मीरमासाद्य स शारदायाः सर्वज्ञपीठं पद्ममारुरुक्षन् ॥
तत्रस्थितान्संप्रति सर्वपण्डितान् चार्वाकमुख्यान्विपुलान्विजित्य ।
स दक्षिणद्वारकवाटभेदं कृत्वा स देव्या विनिशंस्यमानः ॥
शंकान्निराकृत्य निविश्य पीठे ततो बदर्याश्रममाप दण्डी ।
नारायणं तत्र तपज्जलौघं कुण्डं प्रशीतस्य निवारणाय ॥
ध्यात्वा शिवं तत्र निविश्य तस्थौ कैलासदेशाद्वृषभश्च देवाः ।
तमेत्य संस्तुत्य यदायुषस्ते कालोऽगमत्वं वृषभेऽधिरोह ॥
इति प्रचीर्णः प्रभुरात्मनि स्वे विचिन्त्य शिष्यान्निजगाद मोदात् ।
यूयं चतुर्दिक्षु मठेषु लिङ्गैः साकं वसन्त्वित्युपदिश्य हर्षात् ॥
विवेश पृष्ठं वृषभस्य हस्तं संगृह्य वैरिञ्चमथास्य दत्तं ।
सर्वैश्च देवैः अभिनन्द्यमानः स शंकरः तन्निजधाम देव ः ॥
विवेश कैलासनिवेशमच्छं सच्छन्दवृन्दारकवृन्दपूर्णं ।
तदादि तच्छंकर भाष्यमेतद् भूमौ जनं मुक्तिपदं ददाति ॥
एतत्तेऽभिहितं देवि मुख्यं मुक्तिपदावहं ।
शांकरं चरितं लोके भविष्यति न संशयः ॥
स्कन्द उवाच ॥
इति श्रुत्वा महेशानाच्चरितं शंकरस्य सा ।
पुलकांकुर संहृष्टा प्रणनाम महेश्वरं ॥
इति श्री शिवरहस्ये नवमांशे शंकर प्रादुर्भावो नाम षोडशोऽध्यायः ।

அனந்தானந்தகிரி சங்கர விஜயம் - மதறாஸ் யூனிவர்சிடி 1971-ம் ஸூ வெளியீட்டின் பின்பகுதி 82-வது பக்கத்தின் முடியுமிடமான काञ्च्यामथ सिद्धिमाप என்பதற்கு தொடர்ச்சியாக மேல் காட்டிய சுலோகங்களை இணைத்துப் படிக்கவும் அல்லது, மாதவீய சங்கர விஜயத்தில் 16-வது ஸர்க்கம் 103 வது சுலோகத்திற்கு வியாக்யானகாரர் எடுத்துக் காட்டிய சிவரஹஸ்ய சுலோகம் 46-க்கு பின் இந்த பாகத்தையும் சேர்த்துப் படிக்கவும்.

இவ்வளவு முடிய அடங்கி, சரிவர முடிவுபெறும் இந்த அத்யாயத்தில் ஈச்வராவதாரம் என்ற பதம் - மாதவீயசங்கர விஜயத்தில் வருவதை நிரூபணம் செய்வதற்காக 46 சுலோகங்கள் மட்டிலும் மேற்கோளாக வியாக்யானக்காரர் எடுத்துக் காட்டியிருக்கிறார். இந்த விவரம் மேலே 9-வது பாராவில் காட்டியிருக்கிறது. பின்பாகத்தில் ஈசாவதாரம் என்பதை

நிருபணம் செய்வதற்குரிய பதங்களில்லாதபடியால் இந்த 13 சுலோகங்களையும் மாதவீய சங்கரவிஜய வியாக்யானகாரர் குறிப்பிடவில்லை. இவ்விடம் சொல்ல வேண்டுவது என்ன வெனில் ஸித்தி என்ற பதத்திற்கு மரணம் என்ற அர்த்தம் கிடையவே கிடையாது. இந்த பதம் षिधु-संराद्धौ அல்லது निष्पत्तौ என்ற தாதுவிலிருந்து உத்பத்தியானது. सिद्धि என்றால் பலநிஷ்பத்தி என்றுதான் அர்த்தம். இதை விளக்கி, அடுத்த சுலோகத்தில் काञ्च्यांतपस्सिद्धिम-वाप्य दण्डी என ஆரம்பிக்கப்படுகிறது. முன் சுலோகத்தில் சங்கரர் ஸித்தியடைந்தார் என்றிருக்கிறது. எது விஷயமான ஸித்தி (பலநிஷ்பத்தி) என்ற கேள்விக்கு பதில் கூறும் வகையில் மறு சுலோகத்திலேயே சங்கரர் என்ற ஸந்யாஸி, காஞ்சியில் செய்த தவத்தின் பயனைபெற்று அதன்பேரில் சாரீரக பாஷ்யம் எழுதினார். காசிக்குச்சென்று வியாஸரோடு ஸம்பாஷணை செய்தார்: மண்டனரை ஜயித்தார். வாணியை ஜயிக்கும் பொருட்டு பரகாயப் பிரவேசம் செய்து காமசாஸ்திரம் கற்று வாணியை ஜயித்து தன்மடத்தில் (சிருங்கேரியில்) பிரதிஷ்டை செய்தார். கர்னாடக தேசத்தில் கிரகசன் என்ற காபாலிகனை வென்றார்.

கோகர்ணத்தில் ஈச்வரனை துதி செய்து மஹாராஷ்டிர தேசம் சென்றார். இங்கே பாஸ்கரர், பட்டர், நீலகண்டர் முதலிய பண்டிதர்களை வென்றார். சாரதாவின் ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏற விரும்பினார். அங்கிருந்த சார்வாகன் முதல் ஆரம்பித்து பல சாஸ்திர பிரவீணர்களை வென்றார். பீடத்தின் தெற்கு வாயில் கதவை திறந்தார். பரதேவதை சில ஆசங்கைகளைத் தெரிவிக்க அதற்கு ஸமாதானத்தை சங்கரர் கூறினார். ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் (காச்மீர தேசத்தில்) நடைபெற்றது. அங்கிருந்து பதரிகாச்ரமம் சென்றார். குளிர்ந்த ஜலத்தை உஷ்ணமாக்கும்படி நாராயணனை பிரார்த்தித்து சௌகர்யத்தைச் செய்தார். பரமேச்வரனை தியானம் செய்தார். கைலாஸத்திலிருந்து விருஷபமும் தேவர்களும் வந்தார்கள். சங்கரரை துதி செய்து, அவரிடம், ஆயுள் முடிந்ததை தெரிவித்து விருஷபத்தில் ஏறும்படி சொன்னார்கள். இவ்விதம் கேட்டவுடன் சங்கரர் யோசனை செய்து

சிஷ்யர்களிடம் கூறினர். நீங்கள் நான்கு திக்குகளிலும் லிங்கங்களுடன் மடங்களில் வஸியுங்கள் என்று ஸந்தோஷத்துடன் உபதேசம் செய்தார். சங்கரர் பிரமாவின் கையைப் பற்றிக்கொண்டு, விருஷபத்தின் முதுகில் ஏறிக்கொண்டார். தேவதைகளினுல் கொண்டாடப்பட்டு, ஸ்வஸ்தானமான கைலாஸத்தை அடைந்தார். அது முதல் சங்கரருடைய பாஷ்யம் பூமண்டலத்தில் மோக்ஷமார்க்கத்தை அறிவித்துக் கொண்டு விளங்குகிறது. மோக்ஷத்தை அளிக்கக்கூடிய இந்த சங்கரரின் சரித்திரம், "தேவியே! (பார்வதியே)" உனக்குச் சொல்லப்பட்டது. சங்கரருடைய சரித்திரம் உலகத்தில் நன்கு விளங்கும். இதில் ஸம்சயமில்லை. (இது முடிய பரமேச்வரன் பார்வதிக்கு சங்கரருடைய சரித்திரம் சொல்லியிருப்பதாய் சிவரஹஸ்யம் தெரிவிக்கிறது.) இதன் மேல் ஸ்கந்தர், அத்தியாயத்தை முடிக்கும் சுலோகமாகக் கூறுகிறர் :- இந்த சரித்திரத்தை பரமேச்வரனிடமிருந்து கேட்டதும் பார்வதி மிகவும் ஸந்தோஷத்தையடைந்து புளகாங்கிதத்துடன் பரமேச்வரனை நமஸ்காரம் செய்தாள். சிவரஹஸ்யம் 9-வது அம்சம் 16-வது அத்யாயம் இத்துடன் முற்றுப்பெறுகிறது. இதுதான் பிந்திய பாகத்தின் பொழிப்புரை.

16. சங்கரர் தன் பாஷ்யத்தில் பற்பல இடங்களில் பூர்வ பக்ஷியின் (ஸித்தாந்தத்துக்கு ஆக்ஷேபனை தெரிவிக்கிறவர்களை பூர்வ பக்ஷியெனக் குறிப்பிடுவது சாஸ்திர முறை) கக்ஷியைப் பற்றி பேசும்போது "அர்த்தஜரதீய நியாயம்" என்று பூர்வபக்ஷியின் குற்றத்தை எடுத்துக் காட்டியிருக்கிறர். பூர்வபக்ஷிகள் தங்களுக்கு ஸாதகமான பிரமாணத்தைக் காட்டும்போது, அந்த பிரமாணத்திலுள்ள பூரா பாகத்தையும் எடுத்துக்கொள்ளாமல் ஏதேனும் ஓரிடம் மட்டும் தங்கள் ஆக்ஷேபனைக்கு அனுகூலமாயிருப்பதாக தெரிவிப்பார்கள். தன் கக்ஷிக்கு பிரதிகூலமாக அதே பிரமாணத்திலிருப்பதை எடுத்துக்காட்ட மாட்டார்கள். இவ்விதம் பாதியை மட்டும் எடுத்துக்கொண்டும், மற்றதை விட்டுவிடுவதும் "அர்த்த ஜரதீய நியாயம்" என்று கூறி பூர்வபக்ஷத்தை தள்ளுபடி

செய்வது சாஸ்திர ஸம்பிரதாயம். இதே போல கும்ப கோணம் மடத்தார் சிவரஹஸ்ய பிரமாண விஷயத்தில் கையாண்டிருக்கிறார்கள். சிவரஹஸ்யத்தின் ஒவ்வோர் அத்யாயத்தின ஆரம்பத்திலும் ஸ்கந்தர், "இன்ன சரித்திரத்தை பார்வதிக்கு பரமேச்வரன் கூறுகிறார்" என ஆரம்பித்து, சரித்திர முடிவில் அத்யாயத்தை முடிக்கும் ரீதியாக ஸ்கந்தரே கூறுவதாக "இவ்விதம் ஈச்வரனிடமிருந்து சரித்திரத்தைக் கேட்டு பார்வதி ஸந்தோஷமடைந்தாள்" என்று முடியும். அதன் மேல் (Colophon) इति श्रीशिवरहस्ये... अध्यायः என்று முடித்து விட்டு அதன்பின் மறு அத்யாயம் ஆரம்பமாகும். வாசகர்களும், முக்கியமாக சர்வகலாசாலை ப்ரொபெசர்களும் இதை குறிப்பாக கவனிக்கவும். இந்த 16-வது அத்யாயத்திலும் स्कन्द उवाच என ஆரம்பத்தில் தொடங்கி, கதையின் மத்ய பாகத்திலேயே வருகிற काञ्च्यां अथ सिद्धिमाप என்ற இடத்தில் அத்யாயமே முடிந்து விட்டது போல காட்டுகிறார்கள். இதற்கு காரணம், காஞ்சியில் சங்கரர் (ஸித்தி) மரணமடைந்தார் என்ற கதை கும்பகோணம் மடத்தாருக்கு அனுகூலம். ஐந்து லிங்கங்கள் சங்கரருக்கு கிடைத்த கதையும் அடங்கியுள்ளது. ஆகவே, தங்களின் காஞ்சீமடக் கொள்கைக்கு சிவரஹஸ்யம் ஆதாரமளிக்கிறது என்று கற்பனை செய்கிறார்கள். அப்படி இல்லையே என ஆக்ஷேபித்தால், மாதவீய சங்கர விஜயம் 16-வது அத்யாயம் 103-வது சுலோக வியாக்யானத்திலேயே काञ्च्यां अथ सिद्धिमाप என்று இருக்கிறதா, இல்லையா என ஜவாப் சொல்லுகிறார்கள். ஆனால் வியாக்யானகாரர் இந்த இடத்தில் சிவரஹஸ்யத்திலிருந்து 46-சுலோகங்களை மட்டிலும் எடுத்துக்காட்டியதற்குக் காரணம், முன் சொல்லப்பட்டது போலவே "சங்கரர் ஈசாவதாரம்" என்ற விஷயத்தை நிரூபணம் செய்வதற்கு எவ்வளவு பாகம் காண்பிக்க வேண்டுமோ அவ்வளவு பாகம் மட்டிலும் மேற்கோளாக காண்பிக்கப்பட்டுள்ளது. சிவரஹஸ்ய சுலோகங்களை ஆரம்பிப்பதற்குரிய மூல கிரந்தத்தில் மாதவீயம் 103-வது சுலோகத்தில், ஏற்கனவே சங்கரர் கேதாரத்துக்கு (பதரிக்கு) வந்ததாயும் அங்குள்ள சீதளமான தீர்த்தத்தை உஷ்ணமாக செய்த பிறகு, பிரம்மா தேவேந்திரன் முதலிய

தேவர்களை கேதாரத்திலிருந்து சங்கரரை அழைத்துச்செல்ல வந்தனர் என கூறியிருப்பது, சிவரஹஸ்யத்தின், பின்பகுதிக்கு ஒற்றுமையாக வருகிறது என்பது தெளிவாக விளங்கும். ஒரு சாரார் நினைக்கும் விதம் (கல்பனை செய்யும் விதம்) காஞ்சியில் சங்கரர் மரணமடைந்தார் என்று வியாக்யானகாரருக்கு தோன்றியிருந்தால், மாதவீய சங்கர விஜயம் 15-வது ஸர்க்கத்தில் 5-வது சுலோகத்திலேயே காஞ்சீபுரத்தில் செய்த கார்யங்கள் முடிவு பெற்றபடியால், பிந்தின அனைத்து சரித்திரமும் சுலோகங்களும் "பிரக்ஷிப்தம்" என்று வியாக்யானகாரர் கூறிவிட்டு வியாக்யானம் செய்வதை நிறுத்திவிட்டிருக்க வேண்டும். ஸித்தி என்ற பதத்திற்கு "பலநிஷ்பத்தி" என்று அர்த்தம் என்பது வியாக்யானகாரருக்கு தெரியாத விஷயமல்ல. काञ्चयां तपस्सिद्धिमवाप्य என்ற பிந்தின சிவரஹஸ்ய கதாபாகம் தொடங்கி, கைலாஸ யாத்திரை முடிய உள்ள சிவரஹஸ்ய பாகம், மாதவீய சங்கர விஜயத்தை அனுசரித்தே கூறுகிறது என்பது வியாக்யானகாரருக்கு தெரியாததல்ல. ஈசாவதாரம் என்பதை விளக்க, சிவரஹஸ்யத்தில் எவ்வளவு பாகம் தேவையோ அதை மட்டிலும் கொடுத்திருப்பதை, குருடர்கள், யானையைப் பார்த்ததுபோல காஞ்சியில் சங்கரர் ஸித்தியைப் பெற்றார் என்ற அளவோடு பார்த்துவிட்டு, "அங்கே தேகவியோகமடைந்தார்" என்பதாக கல்பனை செய்வது அபாண்டமே! ஸித்தி என்ற பதத்திற்கு பின் காலத்தில் இவ்விதம் அர்த்தம் செய்யும்படி நேரிடுமென வியாக்யானகாரர் முன்னம் கருதியிருந்தால் சிவரஹஸ்யத்தின் பின்பாகமுள்பட பூரா அத்யாயத்தையுமே வியாக்யானத்தில் கொடுத்திருப்பார். மேலும் மேற்கோளாக காட்டப்பட்ட 46 சுலோகங்களுள், பல முக்ய சரித்ர பாகங்கள் வரவில்லை. பின்னால் வரும் பாகத்தில்தான், பாஷ்யரசனை, வியாஸஸம்வாதம், மண்டனமிச்ரஸம்வாதம், ஸரஸவாணியை ஜயித்து சிருங்கேரியில் சாரதா பிரதிஷ்டை பிறமத கண்டனம் ஸர்வஞ்ஞ பீடாரோஹணம், நான்கு திக்குகளிலும் மடங்களை பிரதிஷ்டை செய்தல், ஸ்வஸ்தானம் சேர்தல் என்ற முக்ய பாகங்கள் இடம் பெறுகின்றன. இந்த பாகத்தை கத்தரித்துவிட்டு தங்களுக்கு (காஞ்சி மடத்துக்கு) அனுகூல

மான் இடத்தை மட்டிலும் கும்பகோணம் மடத்தார் காண்பித்தால், இதை "அர்த்த ஜரதீய நியாயம்தான் என்று வாசகர்கள் ஸ்திரமாக நம்பலாம். ஆகவே எந்த சிவரஹஸ்யத்தை ஆதரமாகப் பற்றிக்கொண்டு தங்கள் பக்ஷத்தை ஸாதிக்கலாம் என கும்பகோணம் மடத்தார் நினைக்கிறார்களோ அதே சிவரஹஸ்யம் அவர்களுக்கு முற்றிலும் பிரதிகூலமாகவே யுள்ளது என்பதை இனியாவது தெரிந்துகொண்டு, அந்த மடத்தார் இந்த ஆதாரத்தை கைவிடுவார்கள் என நம்பப் படுகிறது.

17. ஆதிசங்கரருக்கு பிரதான சிஷ்யர்கள் நால்வர் என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆதிசங்கரரின் படங்களிலும், நான்கு சிஷ்யர்களுக்கு சங்கரர் உபதேசம் செய்யும் காக்ஷியாகவே இன்றும் பார்த்து வருகிறோம். அவர்களில் ஸநந்தனர் (பத்மபாதர்) என்பவர், சங்கரர் காசியை அடைந்தபின் முதலாவது சிஷ்யராக வந்தவர். அடுத்தபடியாக விச்வரூபர் (மண்டனமிச்ரர்) சங்கரரிடம் ஸம்வாதத்தில் தோல்வியடைந்து ஸுரேச்வரர் என்ற பட்டப் பெயருடன் சங்கரருடனேயே வந்து கொண்டிருந்தார் (இவர் குபேரதிக்கை நோக்கிப் போய்விட்டார் என அனந்தானந்தகிரி சங்கர விஜயத்தின் 177-ம் பக்கத்தில் கூறியிருப்பது பொய் எனறால் மிகையாகாது. குபேரதிக்குக்குச் சென்ற ஸுரேச்வரர் மறுபடியும் காஞ்சிக்கு எப்போது என்ன நிமித்தமாக வந்தார் என காட்டாத வரை காஞ்சீ மடத்தில் ஸுரேச்வரர் நியமிக்கப்பட்டார் என்று அனந்தானந்தகிரி கூறுவதை நம்ப இயலாது.) ஸுரேச்வரர் சங்கரருடனேயே யாத்திரையில் வந்து கொண்டிருந்தார் என்பதுதான் உண்மையான வரலாறு. அவர் சிருங்கேரி மடத்தில் நியமிக்கப்பட்டதாய் कंचिच्छिष्यं सुरेश्वराख्यं पीठाध्यक्षं कृत्वा என முதலில் வெளிவந்த அனந்தானந்தகிரி சங்கர விஜயம் 63-வது பிரகணத்திலுள்ளது. அது பின்னால் திருத்தப்பட்டு பத்மபாதர் சிருங்கேரியில் நியமிக்கப்பட்டதாய் மாறுதல் அடைந்து, இப்பொழுது வெளிவந்துள்ள அனந்தானந்தகிரி சங்கர விஜயம் கூறுகிறது. பதிப்பாளர் இவ்விடத்தில் கீழே குறிப்பு கொடுத்திருப்பதில் பழைய பதிப்பில்

कश्चित् शिष्यं என்ற மட்டில் இருந்ததாக கூறுகிறார். அத்துடன் சேர்ந்து सुरेश्वराख्यं என்று வருகிற பதத்தையும் நீக்கியுள்ளதை பதிப்பாளர் எடுத்துக்காட்ட மனமில்லாமல் குறிப்பில் விடப்பட்டது விசனிக்கத்தக்கது. மூன்றாவது சிஷ்யர் ஹஸ்தாமலகர் என்பவர். ஸ்ரீபலியென்ற கிராமததில் சங்கரரால் சிஷ்யராக ஸ்வீகரிக்கப்பட்டார். நானகாவது சிஷ்யர் கிரி. இவருடைய பாண்டித்ய விஷயமாய் பத்மபாதர் பரிஹாஸம் செய்ததாயும் இவருக்கு ஆசார்யரின் மானஸீக தீக்ஷையேற்பட்டவுடன், அனைவரும் ஆச்சர்யப்படும்படி தோடக விருத்தத்தில ஸ்துதி செய்ததாயும் ஆகையால் தோடகர் என்ற காரணப் பெயர் ஏறபட்டதாயும் சரித்ரம் காட்டுகிறது. தோடகருடைய ஸ்துதியையும் நடைமுறையில் அனைவரும் பாராயணம் செய்கிறார்கள். இவரையே ஆனந்தகிரி யெனறும் கூறுவதுண்டு. இப்பேர்ப்பட்ட உயர்ந்த சிஷ்யர்களின் வரலாறுகளையும் அவர்களால் செய்யப்பட்ட கிரந்தங்களையும் பற்றி, தனது சங்கர விஜயத்தில் எடுத்துக்கூற, அனந்தானந்தகிரி விட்டுவிட்டார், எனறால் இதைக்காட்டிலும் இவருடைய சங்கர விஜயததுக்கு வேறு குறை என்ன வேண்டும்? அனந்தானந்தகிரிக்கு இவர்கள் பேரில் பொறாமை போலும்! அதனால்தான் ஹஸ்தாமலகரை, "வைஷ்ணவ மதஸதாபனம்" செய்ய சங்கரர் அனுபபியதாகக் கதை கூறுகிறார் போலும்! இது வியப்பையே உண்டு பண்ணுகிறது. நிற்க இந்த நான்கு சிஷ்யர்களும் உயர்ந்த ஞானிகளாகவும், கரந்தங்கள் இயற்றுவதில ஒப்புயர்வற்றவர்களாகவும், விளங்கினார்கள். பத்மபாதருடைய பஞ்சபாதிகாவும், ஸுரேச்வரரின் வார்த்திகங்கள், நைஷ்கர்ம்ய ஸித்தி மானஸோல்லாஸம் இவைகளும் தனிச்சிறப்பு உள்ளவை. ஹஸ்தாமலகரின் ஸ்தோத்திரம் (சிஷ்யருடைய கிரந்தமானாலும்) குருவான சங்கராசார்யரால் பாஷ்யம் செய்யப்பட்ட தனிப்பெருமை வாய்ந்தது. அதேபோல தோடகருடைய ஸ்தோத்ரமும் மிகஉயரிய கிரந்தம். இவர்களுள் ஆனந்தகிரி, இந்த பிரக்ருதத்திலுள்ள சங்கர விஜயத்தைச் செய்தார் என சொல்ல முடியாது. அவருடைய காவ்ய நடைக்கும் இந்த சங்கர விஜயத்திலுள்ள வாசக நடைக்கும்,

மலைக்கும் மடுவுக்கும் போல இணைகூற இயலவில்லை. இந்த சங்கர விஜயத்திலுள்ள தப்பிதங்களுள், சிலவற்றை மட்டிலும், ஸ்தாலீபுலாக நியாயப்படி அடுத்துவரும் பாராவில் கூறி யிருப்பதால், இவ்வித அபத்தங்களோடு கூடிய சங்கர விஜயத்தை சங்கர சிஷ்யரான ஆனந்தகிரி செய்தார் என்று அவருடைய பெயருக்கு களங்கம் விளைவிக்க ஒருவரும் விரும்பமாட்டார்கள். மேலும் ஆனந்தகிரி, வடக்கே, பதரி யில் பீடம் வகித்தார் என யாவரும் அறிந்ததே. இவர் இந்த சங்கர விஜயத்தை இயற்றியிருந்தால் இந்த சங்கர விஜயம் வடநாட்டில் பிரஸித்தமாயிருந்திருக்கும். அப்படியோ இல்லை. தென்னாட்டில் மட்டிலும் பழக்கத்திலுள்ள கிரந்தலிபியிலும் தெலுங்குலிபியிலும் ஏட்டு பிரதிகள் கிடைத்துள்ளதாக, பதிப் பாளரே கூறுகிறார். ஆகையால், தென்னாட்டில், சமீப காலத்தில் இந்த கிரந்தம் தயார் செய்யப்பட்டது என்று கூறினால் மிகையாகாது. பதரியில் பீடாதிபத்யம் வகித்த ஆனந்தகி (தோடகர்) இந்த கிரந்தத்தைச் செய்தார் என்று சொல்ல இடமில்லை.

18. இந்த சங்கர விஜயந்திலேயே (இதர மாதவீய-சித்விலா ஸிய-கல்பன வியாஸாசலீயசங்கர விஜயங்களில் கூறப்படாத) அனந்தானந்தகிரி யென்னும் பெயர் சங்கரரின் சிஷ்யர் போல அடிக்கடி கூறப்படுகிறது. அவர் இந்த கிரந்தத்தைச் செய் தார் என்று கூறலாமோ வெனில், கிரந்தத்தின் பல பிரகரணங் களில் கூறப்படும் சம்பவங்கள் சரித்ரத்துக்கு பொருத்தமில்லா திருப்பதால், அவர் செய்தார் என்று கூற இடமளிக்கவில்லை. அவைகளுள் கீழே சிலவற்றை மட்டும் எடுத்துக்காட்டப்படு கிறது.

A) இந்த புஸ்தகம் 69-வது பக்கத்தில், சங்கரர் பிறமத கண்டனம் செய்யும் அவசரத்தில், சங்கரரின் காலத்துக்கும் 500 ஆண்டுகளுக்குப் பின் சிருங்கேரி பீடத்திலிருந்த பாரதீதீர்த்தரின் அதிகரண மாலையையும், அதன் வியாக்யானத்தையும், சங்கரரே குறிப்பிட்டு உபதேசம செய்வதாக இந்த சங்கர விஜயம் கூறுகிறது. இது சரித்திர ரீதியான அசம்பவம். இதன் மூலம் இந்த சங்கர விஜயம் எழுதினவர், 14-ம் நூற்றாண்டுக்குப்

பின்னர்தான் இருந்திருக்க வேண்டும் என தீர்மானமாக கூறலாம். இந்த அனந்தானந்தகிரி, சங்கரருடைய சிஷ்யராகவுமிருந்திருக்க முடியாது என்பதும் நிச்சயமாகிறது.

B) 160-ம் பக்கத்திலும், பாரிப்லவாதிகரண விஷயமாய் பாரதீதீர்த்தரின் அதிகரண ரத்னமாலை சுலோகத்தை சங்கரர் உபதேசித்தார் என்றும் ஷை அதிகரண ரத்னமாலையின் அர்த்தத்தை விளக்கினாரென்றும் கூறப்படுகிறது. இதுவும் மேல்காட்டியபடி சரித்ர ரீதியான அசம்பவம்.

C) 197–198 ம் பக்கங்களில் சங்கரரின் சிஷ்யரான லக்ஷ்மணர் வைஷ்ணவ மதத்திற்கு பாஷ்யம் எழுதினார் என்றும், ஹஸ்தாமலகர் மேற்கே கிருஷ்ண பிரதிஷ்டை செய்தார் எனவும் கதை சொல்லப்படுகிறது. இது முறையே ஸ்ரீராமானுஜாசார்யரையும், ஸ்ரீமத்வாசார்யரையும் குறிப்பிட்டுள்ளதாக சிலர் விமர்சம் செய்து, இந்தக் கதை பொய் என்பதாகவும், சரித்ர ரீதியான அசம்பவம் என்றும், சங்கரருக்கு சிஷ்யராக உள்ள ஒருவரால் இந்த சங்கர விஜயம் எழுதப் பட்டதல்ல என்றும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இந்தக் கதையை வைஷ்ணவர்களும் மாத்வர்களும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இனியும் வைஷ்ணவர்கள் மாத்வர்கள் இந்தப் புஸ்தகத்தைப் பார்வையிட்டு அபிப்பிராயம் தெரிவிப்பார்களென நம்பப்படுகிறது.

D) 183-ம் பக்கத்தில், நாம் வழங்கும் ஸம்பிரதாய சுலோகமான नारायणं पद्मभुवं वसिष्ठं என தொடங்கி वार्तिककारमन्यानस्मद्गुरून्सन्ततमानतोऽस्मि என்று முடியும் வரையிலுள்ள பாகத்தை, அனந்தானந்தகிரியின் வாக்யமாக சரித்திரத்தில் இடம் பெறுகிறது. (இந்த ஓரிடத்திலாவது நான்கு பிரதான சிஷ்யர்களையும் கூறி இந்த சரித்ரம் இடம் பெற்று விட்டது குறித்துப் போற்றப்படுகிறது) இந்த சுலோகத்தில் வரும் अस्मद् என்ற சப்தம் அனந்தானந்த கிரியைக் குறிப்பிடுகிறது. இதன் மூலம், அவனுக்கு சங்கரரின் நான்கு சிஷ்யர்களுமே குருக்கள் என்று ஏற்படுவதுடன். अन्यानस्मद्गुरून् என்ற பதங்களால், குரு பரம்பரையில் பின்னால் வந்தவர்களும், அனந்தானந்தகிரிக்கு குருக்கள்

என்று ஏற்படுகிறது. இதனால் கிடைப்பது என்னவென்றால் அனந்தானந்தகிரி என்ற இந்த கிரந்தகர்த்தா, எந்த பிரகாரத்தாலும் சங்கரருடைய ஸம காலத்திய சிஷ்யராக இருந்திருக்க முடியாது என்றும் தோடகரைக் குறித்தும் இந்த சுலோகத்தில் இடமளித்து, அவருக்குவேறாக தன்னை अस्मद् என்று குறிப்பிடுவதால், இவரை ஆனந்தகிரியாக கருதவும் இடமில்லை என்றும் உறுதிப்படுத்தப்படுகிறது.

அனந்தானந்தகிரி யென்ற இந்த கிரந்தகர்த்தா தன்னை சங்கரருடைய சிஷ்யர் என்று இந்த கிரந்தத்திலேயே பலவிடங்களில் காட்டியுள்ள போதிலும் அவர் சங்கரரின் ஸம காலத்தவர் அல்லவென ருஜுப்படுத்துவதற்கு இந்த அளவே போதுமானது. தவிரவும் மாதவீய சங்கர விஜயத்தையும் அதன் வியாக்யானத்தையும் அந்த வியாக்யானங்களில் காட்டப்பட்ட பிராசீன கிரந்த பாகங்களையும் படித்துவிட்டு அந்த பிராசீன கிரந்தங்கள் போல் தென்படும்படியாக இந்த சம்பூ கிரந்தத்தை மிக சமீப காலத்தில் "அனந்தானந்தகிரி" என்ற கல்பித பெயரால் செய்தும் எந்த எந்த பாகங்களுக்கு எந்த பிரகாரமாக பிசகுகளும், தாவாக்களும் காட்டப்படுகின்றனவோ, அந்த அந்த இடங்களில் புதிதாக பரிஷ்காரங்கள் செய்து, நூதன நூதனமான ஏடுகள் தயாரித்து "காஞ்சீ மட" ஸ்தாபனத்திற்குரிய கல்பனைகளுடன் பரிஷ்காரங்களை செய்து தென்னாட்டிலேயே தயாரிக்கப்பட்டு, வட நாட்டு லைப்ரெரிகளிலும் சேரும்படியான அளவுக்கு முயற்சி செய்யப்பட்டிருக்கிறது குறித்து இந்த பகீரத பிரயத்தினத்தை மெச்சப்படுகிறது!

19. இந்த அனந்தானத்தகிரி சங்கர விஜயம், அத்வைத சாஸ்திரத்தை அரைகுறையாகப் படித்த ஒருவரால் இயற்றப்பட்டது என ஸ்தாபிக்க கீழ்காட்டிய சான்றுகள் காட்டப்படுகின்றன.

A) 51-ம் பக்கம்: यस्य ब्रह्म च क्षत्रं च என்ற கடோபநிஷத் மந்திரத்துக்கு ஆசார்யாள் தன் பாஷ்யத்தில் "ஸாதனங்களற்ற எவனால் பிரம்மஸ்வரூபத்தை அறிய முடியும்?

என்ற கருத்தில் ஆக்ஷேபார்த்தத்தில் வியாக்யானம் செய்திருக்கிறார். ஆனால் அனந்தானந்தகிரி தன் சங்கர விஜயத்தில் "அவன் பரமாத்மாவாகவே ஆகிறான்" என்ற கருத்தில் மேல்கண்ட மந்திரத்திற்கு தாத்பர்யம் கொடுத்திருக்கிறார். இது ஆசார்ய பாஷ்யத்துக்கு நேர் விரோதம்.

B) 14-ம் பக்கம்: ஐதரேய உபநிஷத்தில் பரமாத்மா தேஹத்தில் பிரவேசிக்கும் விஷயமான மந்திரத்துக்கு அனந்தானந்தகிரி தன் சங்கர விஜயத்தில் भावनोपाधिकस्य (ज्ञानोपाधिकस्य) मूर्धमध्ये प्रवेशः என்பதாகவும் क्रियाशक्त्युपाधिकस्य पादाग्रे प्रवेशात् என்றும் இரண்டு விதமான பிரவேசங்களையும் காண்பிக்கிறார். அப்படியானால், உபநிஷத்தில் "कतरेण प्रपद्या इति" என்ற வாக்கியத்தில் இரண்டுக்குள் எந்த ஒரு மார்க்கமாக பிரவேசிப்பேன் என கேள்வி ஏற்பட்டிருக்காது. மேலும் ஆசார்யாள் தன் பாஷ்யத்தில் "न तावत् मद्भृत्यस्य प्राणस्य मम सर्वार्थाधिकृतस्य प्रवेशमार्गेण प्रपदाभ्यां अधः प्रपद्ये ...इदंतु द्वारं परमेश्वरस्यैव केवलस्येति॥ என்பதாக ஒரே மார்க்கமான மூர்த்தாவை (பரமேச்வரனுடைய மார்க்கம் எனக் குறிப்பிட்டு) உபநிஷத் கூறுவதாய் வியாக்யானம் செய்கிறார். அனந்தானந்தகிரி, ஆசார்யாளின் பாஷ்யத்தை புரிந்து கொள்ளாமலேயே தன் கிரந்தத்தில் மாறுபாடாக ஆசார்யாள் உபதேசித்துள்ளதாக பிசகாக எழுதுகிறார். அத்துடன் நிற்காமல் (கிரந்தகர்த்தாவுக்கே ஸந்தேஹம் வந்துள்ளது போலக் காட்டிக்கொண்டு) ஆசார்ய பாஷ்யத்தை பார்க்கும்படி ஆசார்யரே கூறினார் என்றும் எழுதுகிறார். இதனால் இந்த இடம், அனந்தானந்தகிரிக்கே புரியவில்லையென தெளிவாகிறது.

C) பக்கம் 52: ஜீவகதியைப்பற்றி சரித்திரத்தில் கூறுமிடத்தில், அனந்தானந்தகிரி "तृणजलूकान्यायेन" என்று காட்டுகிறார். ஆனால் அப்படியல்ல. तदन्तर प्रतिपत्ति அதிகரண பாஷ்யத்தில், பஞ்சாக்னி வித்யையில் கூறப்பட்ட ரீதியில் ஜீவன் மறுதேஹத்தை அடையும் விதம் எடுத்துக் காட்டப்படுகிறது. இந்தயிடத்தில் ஜீவகதியை வர்ணிக்கும் அவசரத்தில், மற்றோர் உபநிஷத் வாக்கியத்தில் அடங்கிய,

த்ருணஜலூகா நியாயமானது ஸந்தேஹம் போல எடுத்துக் காட்டப்பட்டது. அதற்கு பாஷ்யத்தில் ஓர் உபபத்தியைச் சொல்லி ஸம்சயத்துக்கு ஸமாதானம் சொன்னபிறகு, அந்த நியாயம் விரோதமல்ல என்ற அளவுக்கு வியாக்யானம் செய்கிறார். அப்படி கூறியபின் பஞ்சாக்னி வித்யையில் கூறிய படியே மறுபடியும் தொடங்கி ஜீவகதி வர்ணிக்கப்படுகிறது. ஆனால் ஆசங்கையாகக் காட்டப்பட்ட तृणजलूकान्याय த்தைக்கைக் கொண்டு ஆசாரியாள் ஜீவகதியை வர்ணிப்பதாய் அனந்தானந்தகிரி கூறுகிறார். இந்தயிடத்திலும் அனந்தானந்தகிரி பாஷ்யத்தை புரிந்து கொள்ளவில்லையென்று தெளிவாய் தெரிகிறது.

D) பக்கம் 15: இங்கு இவ்விதம் எடுத்துக் காட்டுகிறார்: देहत्यागे विमुक्तिः स्यादिति वेदविदो विदुः என்பதாக ஞானிக்கு பிராரப்தகர்மா தொலைந்து சரீரம் நழுவிய பின் மோக்ஷநிலையேற்படுகிறது என்று வேதத்தை அறிந்தவர்கள் அறிந்திருக்கிறார்கள் என்று நேர்மையாக முதலில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இதற்கு நேர் விரோதமாக 194ம் பக்கத்தில் கூறப்படுவது என்னவென்றால் ஸ்தூல சரீரத்தை (தேஹத்தை) ஸூக்ஷ்ம சரீரத்தில் லயம் செய்யும் படியும், ஸூக்ஷ்ம சரீரத்தை காரணசரீரத்தில் மனோமாத்ரத்தில்? —மறையச்செய்தும் மனதையும் பிரபஞ்ச காரணனை கட்டைவிரல் அளவுள்ள புருஷனிடத்தில் லயம் செய்து, பின் அளவிலடங்காத பிரம்மமாகி, விடுதலை பெறுங்கள், என்று ஆசார்யாள் உபதேசித்ததாக சரித்திரத்தில் எழுதியிருக்கிறார். மற்றும் 208ம் பக்கத்தில் இதே விதமாக, சங்கரர் தன் ஸ்தூல சரீரத்தை ஸூக்ஷ்மத்தில் லயப்படுத்தியதாயும் ஸூக்ஷ்ம சரீரத்தை காரண சரீரத்தில் லயம் செய்ததாயும், சின் மாத்ரமாக ஆகிவிட்டதாயும், கட்டைவிரல் அளவான புருஷனாக ஆகி அதன் மேல், பூர்ணமான, பிளவற்ற மண்டலாகாரமான ஆநந்தத்தை அடைந்து பிரபஞ்சத்தை வியாபித்த சைதன்ய ரூபமானார் என்று காட்டியிருக்கிறது. (இதே பக்கத்தில் பதிப்பாளர் கீழே தன் குறிப்பில், வேறு பாடத்தோடு கூடிய ஏட்டு பிரதி யிருப்பதாய் காட்டுகிறார். இது தற்சமயம் பிரகிருதமில்லை) இந்த பிரகாரமாக மோக்ஷ

நிலையை அடைவது 15 வது பக்கத்தில் காட்டிய விதத்துக்கு நேர் மாறுபாடுடன் விளங்குகிறது. இந்த மாதிரியான "சொப்புடு வித்தை" வேதாந்த சாஸ்திரத்திலேயே இடம் பெறவில்லை. கேட்பதற்கு ஆச்சர்யமாயும் சங்கரருக்கு பெருமை தருவது போலும் இப்படித்தான் ஜீவன் முக்தர்கள், விதேஹ கைவல்யமடைகிறார்களென்று, ஓர் உணர்ச்சி ஏற்படுத்துவதாகவும், சாஸ்திரமே இப்படித்தான் போலும் என்பதாய் ஆபாதரமணீயமாய் படியாதவர்களுக்குத் தோன்றக் கூடும். ஆனால் இந்த மாதிரியாக விதேஹ கைவல்யமடைவதாக, உபநிஷத்துக்களோ, ஸூத்ர பாஷ்யாதி கிரந்தங்களோ கூறவேயில்லை. யாவருக்குமே ஜீவன் முக்தனுக்கும் கூட, பிராரப்தம் தொலையவும், தேஹம் பாம்புச்சட்டை உரிந்து கீழே விழுவது போல அவசியம் விழுந்தே தீரும். முக்தனுக்கு மட்டிலும் ஞானத்தால் கர்மாக்கள் தகிக்கப்பட்டு, காரண சரீரமான அஞ்ஞானமும் அழிந்து போகிறது. ஸூக்ஷ்ம சரீரத்தின் முக்யாம்சமான மனது பிரம்மாகாரமாக ஆகி லயமாகிறது. பிராணன், இந்திரியங்கள், அவைகளின் அதிஷ்டானமான அதிபூத-அதிதைவங்களோடு ஒன்றுகின்றன. குடமுடைந்த பிறகு அதனுள் அடங்கிய ஆகாசம் பரந்த ஆகாசத்தோடு இரண்டறக் கலப்பது போல, பிரத்யகாத்மா பரமாத்மாவுடன் ஐக்யமாகிறான். இவனுக்கு மறுபிறவியில்லை. இதுதான் சாஸ்திரம்! இவ்விதமே உபநிஷத்துக்கள் எடுத்துக் கூறுகின்றன. ஆனால் அனந்தானந்தகிரியின் சங்கர விஜயத்தில் 66 வது பிரகரணம் 194ம் பக்கத்தில் ஆசார்யாள் முன் காட்டிய சொப்புடு வித்தையை உபதேசித்தார் என்பதும், 74 வது பிரகரணத்தில் 208ம் பக்கத்தில் இதே சொப்புடு வித்தையைச் செய்து, சங்கரர் ஸச்சிதானந்த ஐக்யத்தை அடைந்தார் என கூறுவதும் சாஸ்திரம் உணராத ஒருவனால், அனந்தானந்த கிரியின் பெயரை வைத்து சரித்ரம் எழுதப் பட்டது என்று கருத இடமளிக்கிறது. மேலும் கும்பகோணம் மடத்து (கல்பனு) குருபரம்பரையில் சுமார் 60 குருக்கள், ஸ்தூல தேகத்தை ஸூக்ஷ்ம தேகத்திலும், ஸூக்ஷ்ம தேகத்தை காரண தேஹத்திலும் மறையச் செய்ததால்தான், அவர்களுக்கு ஸமாதி ஸ்தலங்கள் ஏற்படுத்தவில்லைபோலும்! பின்

வந்தவர்களால், இப்படி செய்ய இயலாமல் போகவே, அவர்களுக்கு மட்டிலும், கும்பகோணம், இளையாத்தகுடி கலவை முதலிய இடங்களில் ஸமாதி ஸ்தலங்கள் ஏற்பட்டது போலும்!

E) 182ம் பக்கம்;— லக்ஷ்மீந்ருசிம்மகராவலம்ப ஸ்தோத்ரம் எட்டு சுலோகங்கள் என அனந்தானந்தகிரி கூறுகிறார். அதே ஸ்தோத்ரத்தில் காணப்படும் பாக்கி சுலோகங்கள் சங்கரர் செய்ததாக அனந்தானந்தகிரி ஒப்புக்கொள்ளவில்லை போலும்.

பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்கிறார் போல இந்த சங்கர விஜயத்தில் பல தப்பிதங்களுள் இந்த ஸ்வல்ப அளவே எடுத்துக்காட்ட போதுமானது. இதனால் இந்த சங்கர விஜயத்தை இயற்றியவர், சங்கருடைய ஸமகாலத்தவருமல்ல, சிஷ்யருமல்ல, சரிவர சாஸ்திரங்கள் கற்றவருமல்ல என நிர்ணயமாகிறது. வாசகங்களில் வியாகரணரீதியாக பல தப்பிதங்களை எடுத்துக் காட்டினால் பெருகுமென நினைத்து இத்துடன் நிறுத்தப்பட்டது.

20. இந்த சங்கரவிஜயத்தை பதிப்பு செய்தவரைப் பற்றியும் கூறுமலிருக்க முடியவில்லை. சரித்திரத்தில் சங்கரர் பேசுமிடங்களிலெல்லாம், பொருந்தாத சில வாக்கியங்களை சுட்டிக் காட்டி, கீழே தனது குறிப்பில் இது ஆனந்தானந்தகிரியின் வாக்யம் என்று எடுத்துக் காட்டுகிறார். இவ்விதம் மூலத்தில் வாசகங்களில் பொருந்தாதவற்றை எடுத்துக் காட்டியதற்கு, பதிப்பாளருக்கும் நம் பாராட்டுகள் உரித்தாகுக! 145ம் பக்கத்தில் एवं वाक्य चतुष्टयस्य उपदेशादेव என மஹாவாக்ய விஷயமாக சங்கர விஜயத்தில் காணப்படுகிறது. இதே விஷயத்தை இன்னும் ஸ்திரப்படுத்தி 146ம் பக்கத்தில் तदुपदेश प्रकारोऽपि महावाक्य चतुष्टयरूप एव என கூறப்பட்டுள்ளது. இந்த யிடத்திற்கு வியாக்யானமோ குறிப்போ தேவையே யில்லை. இரண்டு யிடங்களிலும் एवक् என்ற சப்தத்தைப் போட்டு 4 க்கு மேல்பட்டவைகளை வியாவ்ருத்தி (தடை) செய்யப்பட்டுள்ளது. நான்கு மஹா வாக்யங்களையும் 145ம் பக்கத்தில் மூல கிரந்தத்திலேயே எடுத்து

காட்டப்பட்டதுடன், அதிகப்படியாக नेह नानाऽस्ति किंचन என்ற வாக்யத்தையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிகப்படியான नेह नानाऽस्ति किंचन என்ற இந்த வாக்யத்தையும் மஹா வாக்யம் என்ற கருத்தில் கொடுத்த அனந்தானந்தகிரியின் மௌட்யம் நன்கு விளங்குகிறது. அத்வைதத்தை ஸ்திரப்படுத்துகிற இந்த ஐந்தாவது வாக்யம் மஹா வாக்யமல்ல என கிரந்தக்காரர் புரிந்துகொள்ளாமலேயே, நான்கே மஹாவாக்யம் என்று காட்டியபோதிலும் நான்கு மஹா வாக்யங்களையும் காட்டியதோடு நிற்காமல் ஐந்தாவதாக இந்த வாக்யத்தை காட்டியதிலிருந்து மூலகிரந்தக்காரருக்கு படிப்பு போராது என்று தீர்மானமாகிறது. பதிப்பாளர் ஏதாவது குறிப்பு எழுத வேண்டுமானல் இதற்கு மட்டிலும் குறிப்பு எழுதி யிருந்தால் மிகவும் பொருத்தமாயிருந்திருக்கும். குறிப்பு எதற்கு தேவையோ அதைக் குறிப்பிட விட்டுவிட்டார். தேவையில்லாத விதத்தில் वाक्य चतुष्टयं என்று பதத்தை எடுத்துக் கொண்டு, பல மஹா வாக்யங்கள்—அதிலும் கும்பகோணம் மடத்தாரின் பிடிமானமான ओं तत् सत्, என்பதையும் ஸ்திரப்படுத்தும் விதத்தில் குறிப்பு எழுதுகிருர். அனந்தானந்தகிரியே இந்த ओं तत् सत् என்ற இந்த பதங்களைக் கூற விட்டுவிட்டாரே: பதிப்பாளருக்கு இது விஷயமான கவலை எதற்கு? இதற்குத் தேவையில்லாத குறிப்பு அவச்யம்தானு? பதிப்பாளரே கூற வேண்டும்! தூண்டுதலில்லாமல் இந்தக்குறிப்பு இங்கே கொடுக்கப்படும்படியான அவசியமேயில்லை. கும்பகோணம் மடத்தாரின் இந்த ओं तत् सत् என்ற கல்பிதமான — சாஸ்திர பிரமாணமில்லாத "மஹாவாக்யத்துக்கு" ஆதாரங்கள் சொல்லி பதிப்பாளர் சப்பை வைத்துக் காட்டுகிருர். ஏற்கனவே காசிமுதல் கன்னியாகுமரிவரை இது விஷயமாக கண்டனங்கள் தெரிவித்தும் "மஹாவாக்ய விசாரம்" என்ற புஸ்தகத்தில் பிரமாண புரஸ்ஸரம் இந்த பதங்கள் வாக்யமுமல்ல மஹாவாக்கியமுமல்ல என்று எடுத்துக்காட்டியும், இதற்கும்மறுப்பு எழுதவேண்டுமென்ற முறையிலோ, அந்த கண்டனங்கள் மறைந்து போக வேண்டுமென்ற கருத்திலோ, பதிப்பாளர், விவாதத்துக்குரிய விஷயத்தை இங்கே எடுத்துக்

கொண்டிருக்கிறார். நேர்மையான பதில் கொடுத்தாலும் பரவாயில்லை. கண்டன புஸ்தகத்தில் காட்டிய பிரமாணங்களை மறுத்து வேறு பிரமாணங்களை இங்கே கூறிவிடவில்லை. ஏற்கனவே கும்பகோணம் மடத்தார் சொல்லிக் கொண்டு வந்த கருத்துக்களையே, இந்த குறிப்பிலும் கொடுக்கப் பட்டுள்ளது. கீழ் காட்டும் கேள்விகளுக்கு இந்த குறிப்பில் பதில் கிடையது:-

a) ஸம்க்ஷேப சாரீரககாரரின் வசனப்படி, கும்கோணம் மடத்தார் தங்களுடைய வேதமாக எடுத்துக் கொண்ட ரிக் வேதத்தில் இந்த ओं तत् सत् என்ற மஹாவாக்யம் வருகிறதா? ரிக் வேதத்தில் தேடிப் பார்த்து பதிப்பாளர் பதில் கூறட்டும்!

b) மஹா வாக்ய ரத்னாவளியில் பல மஹா வாக்யங்கள் காட்டப்பட்டவைகளுள் ओं तत् सत् என்பதை மஹா வாக்யமாக எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறதா?

c) ஆசார்யாள் செய்துள்ள பாஷ்யாதி-கிரந்தங்களில், ஜீவ பிரம்ஹ அபேதத்தை நிர்வாகம் செய்ய பல வாக்யங்களை பிரமாணமாக காட்டியிருக்கும் ஏதேனும் ஓரிடத்திலாவது ओं तत् सत् என்பதையும் காட்டியிருக்கிறாரா? பதிப்பாளர் தேடிப்பார்த்து கூறட்டும்.

d) ओं என்ற பதம் तत् என்ற பதம் सत् என்ற பதம் இம் மூன்றும் பிரம்மத்தின் நிர்த்தேசம் (பெயர்கள்) என கீதையில் பகவான் கூறுவதை பதிப்பாளர் மறுக்க இயலுமா?

e) இம் மூன்று பதங்களையும், கர்மாக்களை ஸகுணமாக செய்து கொள்வதற்கு உபயோகிக்க வேண்டும் என ஆசார்யாள் பாஷ்யத்தில் கூறுவது தப்பா?

f) सच्छब्दः तत्ज्ञातृजीव वाचकः எனப் பொருள் கூறி அதற்கு ஆதாரமாக सन्तमेनंततो विदुरिति எனகுறிப்பில் காட்டியிருப்பதில் இந்த ஸத் என்ற பதத்தின் தாத்பர்யம், असद् ब्रह्मेति वेद चेत्। अस्ति ब्रह्मेति चेत् वेद। सन्तमेनं ततो वीदुरिति என்ற ஓரிடத்தில் மட்டும் தான்

பொருந்தக் கூடியது. வேறுயிடங்கள் கொடுக்கப்படுகின்றன. सदेव सोम्येदमग्र आसीत् என்ற இந்த வாக்யத்தில் ஸத் பதத்துக்கு सत् ज्ञातृ जीव वाचकः என்ற அர்த்தத்தை பதிப்பாளர் தைர்யமாகக் கூறுகிறாரா? सच्चिदानन्द என்ற பதத்தில் வரும் ஸத் சப்தத்துக்கு மேல் காட்டிய அர்த்தம் பொருந்துகிறதா? सन्मूलाः सदायतनाः सत्प्रतिष्ठाः என்ற வாக்யத்தில் வரும் ஸத் சப்தத்துக்கு ज्ञातृजीव वाचक என்ற அர்த்தம் பொருந்துமா? सत् என்றால் முக்காலத்திலும் பாதிக்கப்படாத ஸத்ய ரூபமான பிரம்மம் என்று தான் பொருளே தவிர வேறு அர்த்தம் உண்டா?

g) புதிது போல, ராமதாபனீயோபநிஷத்திலிருந்து ओं तत् सत् என்ற பதங்களடங்கிய வாக்யம் காட்டப்பட்டிருக்கிறது:- अहमेवेति संभाव्यः ओंतत्सद्यत् परं ब्रह्म என்பதாக! இந்த வாக்யத்துக்கு கீழே காட்டியபடி அர்த்தம் கொடுக்கப்படுகிறது. ओं तत् सत्= ஓம் என்ற சப்தம், தத் என்ற சப்தம் ஸத் என்ற சப்தம் இந்த மூன்றும் यत्=எந்த परंब्रह्म=பரம் பிரமம (வாசகங்களோ) த்தை குறிபபிடுகின்றனவோ (तत्= அந்த பரபிரம்மம் अहमेव=நானே தான் इति=என்பதாக संभाव्यः=நன்றாய்பாவனை செய்ய வேண்டும். இது தான் ராமதாபனீயோ பநிஷத்துக்கு நேர்மையான அர்த்தம். இந்த வாக்யம் முழுமையும், மஹா வாக்யத்தின் அர்த்தம் பொருந்தியதாக ஆகிறது. இந்த வாக்யத்தின் பின் பாகத்தில் ஏகதேசமாக வரும் பதங்களான ओं—तत्—सत् என்பவைகள். கீதையில் வரும் பதங்கள் போல பிரம்மத்தை குறிப்பிடுவதாக இருக்கின்றவே தவிர, இம்மூன்று பதங்கள் மட்டும் பாக்கியுள்ள பாகத்தை விட்டு விட்டு மஹா வாக்யத்தின் அர்த்தத்தை கொடுக்கவில்லை, இங்கு வரும் ஓம்–தத்–ஸத் என்ற பதங்களுக்கு வேறு அர்த்தமுள்ளதானல் பதிப்பாளர், ஆதாரம் வாய்ந்த பிரமாணத்துடன் காட்டலாம்!

h) ओं என்பது மட்டும் மஹா வாக்யமாக சிலர் வியாக்யானம் செய்திருப்பதாக குறிப்பில் காட்டப்பட்டிருக்கிறது Dr. T. M. P. மஹாதேவன், தான் வெளியிட்ட புஸ்தகங்களில் ओं என்பதற்கு Mystic syllable என அர்த்தம் கூறியிருக்கிறார். வர்ணம் என்ற இந்த தாத்பர்யத்தை அவர் எப்பொழுது

யாற்றிக் கொண்டார்? என்பதை பதிப்பாளர் தெரிவிக்கலாம். ओंकार= ஓம் வர்ணம் என்றே வேதத்திலும் லோகத்திலும் பிர யோகங்கள் இருந்து வருகிறது अ-उ-म् இம்மூன்று வர்ணங் களையும் ஓம் வர்ணத்துக்கு மாத்ரா—அளவு கருவி என்று சுருதிகளே எடுக்துக் காட்டுவதுடன், கௌட பாதரின் காரிகைகளும் இவ்விதமே வர்ணிக்கின்றன. மேலும் ओं ஓர் மஹா மந்த்ரம் என சங்கரர் பிரபஞ்ச ஸாரத்திலும், வேத வியாஸர் ஸூதஸம்ஹிதையிலும் கூறியிருக்கிறார்கள். இவை களை பிரமாணமாகக் கொள்ளாமல், யாதேனும் பின் வந்த ஒருவர், ओं என்பதை மஹா வாக்யம் என்று திரித்து கூறினால், அவர் "ஸம்பிரதாயம் அறியாதவர்" எனக் கூறி விட ஆக்ஷே பணையே இல்லை. ஸம்பிரதாயம் தெரியாத ஒருவன் மஹா வித்வானாக இருந்த போதிலும் அவனை "மூர்க்கவத் உபே க்ஷணீய:" என தள்ளும்படி கீதையில் ஆசார்ய பாஷ்ய மிருக்கிறது.

இவ்வளவு விஷயங்களையும் ஏற்கனவே பலயிடங்களி லிருந்து பல வித்வான்களிடமிருந்து, புஸ்தகங்கள் மூலமும் ஸதஸ்களில் தீர்மானங்கள் மூலமும் எடுத்துக்காட்டப்பட்டி ருந்தும், விடாப்பிடியாய், கும்பகோணம் மடத்தார், முன் சொன்னதையே, திரும்பத் திரும்ப சொல்வதை பதிப்பாளரும் ஏற்றுக்கொண்டு, தன் குறிப்பிலும் எழுதி யிருப்பதும், மூல கிரந்தத்தில் வரும் वाक्य चतुष्टयस्य என்பதற்கு விவரணம் போல் முரண்பாடாக கூறுவதும், எந்த பிரகாரத்தாலும் ஸமஞ்ஜஸமாக ஆகாது. சங்கர ஸம் பிரதாயமுமல்ல என்பதை பதிப்பாளர் தீர்க்கமாய் யோசித்து தீர்மானம் செய்து கொள்வார் என நம்பப்படுகிறது. எந்த பிரகாரத்தாலும் எப்பேர்ப்பட்ட படிப்பாளியையும் கும்ப கோணம் மடத்தார் கவர்ச்சி செய்துவிடுவார்கள் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. உபதேஷ்டவ்யதீக்ஷா மஹாவாக் யங்கள் சங்கரஸம்பிரதாயத்தில் நான்கு மட்டுமே! ओं तत् सत् என்ற பதங்கள் மஹாவாக்யமல்ல! இந்த பதஸ மூஹம் கும்பகோணம் மடததாரின் ரிக்வேதத்திலுமில்லை! இந்த பதங்கள் கர்மாக்களை ஸகுணமாக செய்து கொள்ள கர்மாக்களின் முடிவில் உச்சரிக்க வேண்டியதான விதி

யோகத்தை சங்கரர் பாஷ்யத்தில் காட்டியிருக்கிறார். இவ்விதமாகவே கர்மாக்களின் முடிவில் ॐ तत् सत् என்று கூறி முடிக்கிறோம். இது தான் சங்கரஸம்பிரதாயப்படி ஏற்பட்ட தீர்மானம்.

21. ஷண்மத ஸ்தாபன விஷயத்தில் மாதவீய சங்கரவிஜய வியாக்யானகாரர் எடுத்துக்காட்டிய வார்யரூபமான பிராசீன சங்கரவிஜயத்தில் வைஷ்ணவ மதஸ்தாபனத்திற்கு லக்ஷ்மணர் என்பவரை மட்டிலும் சங்கரர் நியமித்தார் என காட்டப்பட்டுள்ளது. இதுவும் பெயரளவில் காட்டப்பட்டுள்ளதே தவிர இந்த லக்ஷ்மணர் வைஷ்ணவ மதஸ்தாபனத்திற்கு எங்கெங்கு சென்றார், என்னென்ன கார்யங்கள் செய்தார் என ஷெ சங்கர விஜயம் சொல்லவுமில்லை வியாக்யானக்காரரும் விளக்கிக்காட்டவில்லை. ஆனால் அனந்தானந்தகிரி தன்னுடைய சங்கர விஜயத்தில் 68-வது பிரகரணத்தில் மேல் காட்டிய லக்ஷ்மணருடன் ஹஸ்தாமலகரையும் சேர்த்துக் கொண்டு அவர்களுக்கு காஞ்சியிலே அப்பொழுதே (तदानीमेव) ஸன்யாஸம் கொடுத்து வைஷ்ணவ மத ஸ்தாபனம் செய்ய அனுப்பினார் எனகாட்டப்பட்டிருக்கிறது. ஹஸ்தாமலகர் ஸ்ன்யாஸம் பெற்ற கதை யாவரும் அறிந்த விஷயம். ஸ்ரீபலி என்னும் கிராமத்தில் ஓர் பிராமணனுடைய புத்ரனாக இருந்த பிரும்மசாரிப்பையன் மிகவும் ஜடமாயிருந்தபடியால் இவனை தகப்பனார், சங்கராச்சார்யார் அந்த கிராமத்துக்கு விஜயம் செய்தபோது அவர்முன் அழைத்துச் செல்லவும். ஆசார்யருடைய தர்சன தீக்ஷையால், வேதாந்த தத்வங்களை அந்த பிரம்மசாரி எடுத்துக் கூறவும் அந்த ஸ்ரீபலி கிராமத்திலேயே அவனுக்கு ஹஸ்தாமலகர் என்ற தீக்ஷா நாமத்துடன ஸன்யாஸம கொடுத்து ஆசார்யாள் தன்னுடைய சிஷ்யனாகச் செய்து, கூடவே எல்லாயிடங்களுக்கும் அழைத்துச் சென்ற கதையை யாவரும் அறிவார்கள். இதற்கு மாறாக, ஹஸ்தாமலகருக்கு காஞ்சியில் சங்கரர் ஒரு மாத காலம் வசித்த காலத்துக்குள் ஸன்யாஸம் கொடுக்கப்பட்டது என அனந்தானந்தகிரி கூறுகிறார்! தவிரவும் ஹஸ்தாமலகர் நான்கு பிரதான சிஷ்யர்களுள் ஒருவர் என்பதும் அவர் சதுராம்நாய பீடங்களுள் ஒன்றில் பீடாதிபதியாக நியமிக்கப்பட்டார் என்

பதும் யாவரும் அறிந்ததே! இதே ஹஸ்தாமலகரைத்தான், இந்த சங்கர விஜயத்திலேயே 183-ம் பக்கத்தில், नारायणं पद्मभुवं वसिष्ठं என ஆரம்பித்து हस्तामलकंच शिष्यं என்று அத்வைத ஸம்பிரதாய குருக்களில் ஒருவராக காட்டப்பட்டிருக்கிறது. இந்த புஸ்தகத்தின் மூலமாகவே இவர் முன்னமேயே ஸன்யாஸம் பெற்றவர் என ஊஹிக்க இடமளிக்கிறது. முன் எழுதியதை கருதாமலேயே பின் சரித்திரத்தில் இந்த ஹஸ்தாமலகருக்கு காஞ்சியில், கடைசி காலமான ஒரு மாதத்துக்குள் சங்கரர் ஸன்யாஸம் கொடுத்துள்ளதாயும் அவரை வைஷ்ணவமதஸ்தாபனத்துக்கு நியமித்ததாயும், இந்த ஹஸ்தாமலகர் மேற்கு திக்கில் கிருஷ்ண பிரதிஷ்டை செய்தார் எனவும் அனந்தானந்தகிரி கதை கூறுகிறார்! எந்த அளவுக்கு இந்த சங்கர விஜயம் உண்மையைக் கூறுகிறது என்பதை வாசகர்களே விமர்சம் செய்யவேண்டிய விஷயம். இந்த ஹஸ்தாமலகர் செய்த ஸ்தோத்திரத்தையும், இந்த ஸ்தோத்ரத்துக்கு ஆசார்யாள் செய்துள்ள பாஷ்யத்தையும் யார் பார்த்தாலும், ஹஸ்தாமலகர் அத்வைத சாஸ்திரத்துக்கு மாறுபாடாக வைஷ்ணவ மதத்தை (த்வைத மதத்தை) ஸ்தாபித்திருக்கவே மாட்டார் என்பதை நன்கு உணரக்கூடும்.

22. Dr. மஹாதேவன் தனது முகவுரையில் (பக்கம் iv) K. T. டிலாங் எனனும் ஆராய்ச்சியாளரின் அபிப்பிராயத்தை: "இந்த சங்கர விஜயத்தை இயற்றியவர் சங்கரருடைய ஸமகாலத்திலிருந்ததாக சொல்ல முடியாது. தன்னை ஆரம்ப வாக்யத்தில் சங்கரருடைய சிஷ்யர் எனக் கூறப்பட்டதை அத்வைத பரம்பரையில் வந்த ஓர் சிஷ்யராகவே கிரந்த கர்த்தாவை கருத வேண்டும்" என ஆங்கிலத்தில் கூறுவதை காட்டியிருக்கிறார். Dr. மஹாதேவன் மேல்கண்ட கருத்தை மறுக்காமல், இவ்விதம் தனது கருத்தை ஆங்கிலத்தில் தெரிவிக்கிறார்:- டிலாங்கின் அபிப்பிராயத்தை நாம் ஒப்புக்கொண்டால் சங்கரரின் ஸம காலத்திலிருந்த வேறோர் அனந்தானந்தகிரியை (சங்கரரின் சிஷ்யராக விஜயத்தில் காட்டியிருப்பதாய்) ஒப்புக்கொள்ள வேண்டும். நமது சங்கர விஜயத்தை இயற்றியவரின் (மற்றோர் அனந்தானந்தகிரியின்

மிகவும் பாராட்ட தருந்தவரின் - விவரங்களை மேல்கொண்டு அறிவதற்கு இயலாதது குறித்து விசனிக்கத்தக்கதாயிருக்கிறது. ஆனால் அவருடைய இந்த கிரந்தம், சங்கரருக்குச் செய்துள்ள பிரகாசமான ஸேவையாகவே இருக்கும். சங்கரர் காட்டிய வழியை சிறந்த முறையில் பின்பற்றும் உயரிய பக்தராக இந்த கிரந்தகர்த்தா இருக்கிறார்." இது Dr. T.M.P. மஹாதேவனுடைய அபிப்பிராயம். ஏற்கனவே 18-வது பாராவில் கிரந்தகர்த்தா சங்கரரின் ஸமகாலத்தவருமில்லை. அவருடைய சிஷ்யருமல்ல என பல ஆதாரங்களுடன் நிரூபிக்கப்பட்டது. இன்னும் சரிவர ஆராய்ச்சி செய்தால், சங்கரருடைய சிஷ்யராக கூறப்படும் அனந்தானந்தகிரி வேறு, இந்த கிரத்தத்தை இயற்றிய அனந்தானந்தகிரி வேறு. பற்பல ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்து பார்த்தால் சிதம்பரத்தில் விசிஷ்டாவுக்கு புருஷன் பிரிந்தபின் சங்கரர் பிறந்தார் என கூறும் அனந்தானந்தகிரி வேறு, காலடியில் சிவகுரு. ஆர்யாம்பாளுக்கு சங்கரர் பிறந்தார் என கூறும் அனந்தானந்தகிரி வேறு! ஐந்து லிங்கங்களைப் பற்றி பிரஸ்தாபிக்காமல் சங்கர விஜயம் எழுதிய அனந்தானந்தகிரி வேறு! ஐந்துலிங்கங்களைப் பற்றி கதை சொல்லும் அனந்தானந்தகிரி வேறு! சிருங்கேரியில் ஸுரேச்வரரை மடாதிபதியாக நியமித்ததாக கூறும் அனந்தானந்தகிரிவேறு, காஞ்சியில் ஸுரேச்வரரை நியமனம் செய்ததாக கதை சொல்லும் அனந்தானந்தகிரி வேறு! சங்கரரின் ஸச்சிதானந்த ஐக்யத்தைக் கூறும் அனந்தானந்தகிரி வேறு, சரீரத்தை விட்டுவிட்டு சங்கரர் மறைய வேதகோஷங்களுடன் சரீரம் அடக்கம் செய்யப்பட்டது என்று கதை சொல்லும் அனந்தானந்தகிரி வேறு! என்பதாக எல்லாம் விவரிக்க இடமளிக்கிறது. ஒரே ஆசாமி அனந்தானந்தகிரி யென்ற பெயருடன், சங்கரருடைய ஸமகாலத்திலிருந்தவர். சங்கரரின் சரித்திரத்தை எழுதியிருந்தால், ஒன்றுக்கொன்று முரண்படும் அளவுக்கு இப்பேர்பட்ட மாறுபாடுகளுடன் சரித்ரம் தோன்றியிருக்க முடியாது என்பதை யாவரும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். வேதங்களோ, ராமாயணமோ, பாரதமோ இதர காவ்ய நாடகங்ளோ, மேல்காட்டியவிதம் பரஸ்பரம்

முரண்பாடுள்ளதாக (முதல் பாராவில் காட்டியபடி) பாட பேதங்களில்லாமலிருக்க இந்த அனந்தானந்தகிரி சங்கர விஜயம் மட்டும் ஏன் இத்தனை மாறுபாடு வாய்ந்ததாகவும் பாட பேதங்களுடனும் (பச்சை ஓந்தி போல) இருக்க வேண்டும்? வெவ்வேறு காலத்திலுள்ள சில பண்டிதர்களால் அனந்தானந்தகிரியின் பெயரை உபயோகித்து ஸந்தர்ப்பத்துக் கேற்றவாறு சரித்திரத்திலுள்ள பாகங்களில் திருத்தங்கள் கொடுத்து பற்பல ஏடுகள் தயாரித்து தேசத்தின் பல லைப்ரெரி களிலும் வைக்க ஏற்பாடு செய்யப்பட்டது எனக் கூறினால் மிகையாகாது. இவற்றுள்ளும் எந்த எந்த ஏடுகளை ஏற்கலாம், எவைகளை புறக்கணிக்கலாம், என பிரித்து, தேவையானவைகளை மட்டிலும் ஏற்றுக்கொண்டு அவைகளுக்கு உருவம் கொடுத்து இந்த சங்கர விஜயம் 1971 - ஞூ த்தில் அச்சாக்கப்பட்டது என்பதுதான் இதன் வரலாறு. இவ்வளவு விவரங்களை ஆராய்ந்து அறிந்துகொள்ளும் ரீதியில் புஸ்தகத்தை அம்பலப்படுத்திய Dr. மஹாதேவனுக்கும் Dr. வீழிநாதனுக்கும் நன்றி உரித்தாகுக! தவிரவும் இப்புத்தகம் 198ம் பக்கத்தில், கீழே காட்டப்பட்டுள்ள குறிப்பில், வைஷ்ணவ மதஸ்தாபன கதை, தாந்த்ரீக வைஷ்ணவர்களால் ஜோடனை செய்யப்பட்டது என பதிப்பாளரே கூறுகிறார், ஆகவே பதிப் பாளரின் ரீதியாகவும், தாந்த்ரீக வைஷ்ணவர்கள் அனந்தானந் கிரியின் பெயரால் கதை ஜோடனை செய்துள்ளதாக அங்கீகா ரமாகிறது: ஆனாலும் பதிப்பாளரின் குறிப்பும் மூலகிரந்தமும் வைஷ்ணவர்களால் ஒப்புக் கொள்ளப்படுகிறதா என்பது கவனிக்க வேண்டிய விஷயம் இந்த கிரந்தகாரர் சங்கரருக்கு சிறந்த பிரகாசமான ஸேவை செய்துள்ளார் என்று Dr. மஹா தேவன் கூறுவதைக் காட்டிலும் இந்த கிரந்தக்காரர்கள் கும்ப கோணம் மடத்தாருக்குச் சிறந்த பிரகாசமான ஸேவை செய் துள்ளார்களென அங்கீகரிப்பதே யுக்தமாக ஆகும். மற்றோர் விஷயமும் இங்கே எடுத்துக் காட்டாமலிருக்க முடியவில்லை.

26—11—1972 உய "கல்கி" பத்திரிகை, 9ம் பக்கத்தில் ஆதிசங்கர பகவத் பாதாளுக்கு "சிக்குடையார்" என்ற பெயர் உண்டு என தெரிவிக்கிறது இதுவும் வருங்காலத்தில்

மற்றோர் அனந்தானந்தகிரி விஜயப்பதிப்பில் இடம் பெற்றால் நாம் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

23 மேலும் ஆதிசங்கரருடைய சரித்திரத்தில் மிகவும் பிரதானமாகவும் சிறப்பு வாய்ந்ததும், பிரகாசமானதுமான கீழ் காட்டிய ஸம்பவங்கள் யாவரும் அறிந்ததே. இந்த ஸம்பவங்கள். இந்த அனந்தானந்தகிரி சங்கர விஜயத்திலிருக்கின்றனவா என, இரண்டு மூன்று முறைகள் தேடித் தேடி பார்த்தேன். இந்த முக்ய ஸம்பவங்கள் இந்த நூதன பிரசுரத்தில் காணவேயில்லை! அவை யாவன :- (1) சங்கரர், பிரம்மசாரியாக இருந்த தருணத்தில் ஓர் தரித்திரம் வாய்ந்த தாய் பிக்ஷான்னம் போட இயலாத தன்மையால் ஓர் நெல்லிவத்தலை சங்கரருக்கு பிக்ஷையாக பக்தி சிரத்தையுடன் அளித்ததற்கு சங்கரர் மஹாலக்ஷ்மியை கனகதாரா ஸ்தோத்ரத்தால் துதி செய்ய, அந்த வீட்டில், கனகவர்ஷம் ஒரு முகூர்த்த காலம் வர்ஷித்த சரித்ரம். (2) தன் தாயாரின் வயோதிக நிலையில், வெகு தூரத்திலிருந்த நதிக்கு போய் வர முடியாத கஷ்டத்தை தவிர்க்க நதியை தன் வீட்டிற்கு சமீபத்தில், பிரவஹிக்கும்படி செய்த அமானுஷமான லீலை, (3) கோவிந்த பகவத் பாதரை முதன் முறையாக சந்தித்த போது, "நீ யார்" என்ற கேள்விக்கு சங்கரர் தசசுலோகி யென்ற க்ருதியால், தன் அத்வைத ஸ்வரூபத்தை விளக்கிய சரித்திரம். (4) காசியில், விச்வேச்வரர் சண்டாள வேஷத்துடன் தோன்றி சங்கரருடைய அத்வைத அனுபவத்தை குறித்து சோதனை செய்யும்படியான கேள்விகளுக்கு சங்கரர் பதிலாக மனீஷா பஞ்சகத்தை கூறிய சரித்திரம் (5) ஸநந்தனருக்கு காரணப்பெயராக பத்மபாதர் என்றும் ஸ்ரீபலி கிராமத்தில் ஜடபிராய மாயிருந்த பையனுக்கு காரணப் பெயராக ஹஸ்தாமலகர் என்றும், ஆனந்தகிரிக்கு காரணப் பெயராக தோடகர் என்றும் ஸுரேச்வரருக்கு காரணப் பெயராக வார்த்தீக காரரென்றும் ஏற்பட்டதற்கு நிமித்தமான சரித்ரங்கள் (6) ஸன்யாஸம வாங்கிக் கொள்ளும் போது வருந்திய தன் தாயாருக்கு கொடுத்த வாக்குதத்தமும், அதன்படியே தாயாரின் அந்திய காலத்தில். காலடிக்கு நேரில் சங்கரர் வந்து தாயாருக்கு உத்தம லோகங்களளித்து, தன் சக்தியால்

அக்னியை உண்டாக்கி தாயாரின் உத்தர கிரியைகள் செய்து வாக்குதத்தத்தை நிறைவேற்றிய கதை (7) ஓர் காபாலிகனுக்கு அவன் வேண்டுகோள்படி ஸர்வஞ்ஞரான தன் தலையை கொடுப்பதாக சங்கரர் கூறியதும் அவ்விதம் சங்கரருடைய தலையை வெட்ட வந்த காபாலிகனை, பத்மபாதர் தனக்கு ஏற்பட்ட நரஸிம்மமூர்த்தி ஆவேசத்தால் நிக்ரஹம் செய்த சரித்திரம் (8) ஸர்வஞ்ஞ பீடா ரோஹணம் செய்த அத்புதமான சரித்ரம். சங்கரருடைய சரித்ரத்திலேயே மேல் காட்டியவைகள் தான் மிக பிரகாசம் வாய்ந்தவை. பரம குரு என்றும், குரு என்றும் பற்பல பிரகாரமாக சங்கரரை அழைக்கும் அனந்தானந்தகிரிக்கு மேல் காட்டிய சரித்ரங்களால் சங்கரரை பெருமைப்படுத்த இஷ்டமில்லை போலும்! இவ்வளவு சரித்திரங்களை நீக்கியுள்ள தன்மையில், Dr. T. M. P. மஹாதேவன், கீழ் காட்டிய விதம் தன் முகவுரையில் அனந்தானந்தகிரிக்கு புகழ் மாலை சூட்டுவது வியப்பையே அளிக்கிறது.

a) The author makes us follow the short life of Sankara packed with momentous events, with a sense of participation and enrichment.

b) (The book is) a glowiug tribute to Sri Sankara

c) Valuable or as a definitive edition

மேலே குறிப்பிடப்பட்ட சரித்ரங்களை நீக்கப்பட்ட நிலையில் இந்த சங்கர விஜயத்தையும் அதன் கர்த்தாவையும் Dr. T.M.P. மகாதேவன் புகழுவது பொருத்தமாகுமா என்பதை வாசகர்களை விமர்சம் செய்யக் கோறுகிறேன். மேலும், வருங்காலத்தில் விட்டுப்போன மேல் காட்டிய சரித்ரங்களை நூதனமாக கல்பித்து மற்றோர் சங்கர விஜய ஏடு, அனந்தானந்தகிரியின் பெயரில் தோன்றுது எனவும் நம்புகிறேன.

24. காஞ்சீபுரத்திலுள்ள ஆலயங்களில் காணப்படும் சில கல்வெட்டுகளை எடுத்துக்காட்டி, இந்த கல்வெட்டுகள், ஆதி சங்கரரின் உருவங்கள் எனவும், இதன் மூலம் காஞ்சியில் சங்கரர் மடம் ஏற்படுத்துவதையும் விதேஹ முக்தியடைந்ததையும் உறுதிப்படுத்துவதாய் Dr. T. M. P. மஹாதேவன்

தன் முகவுரையில் (பக்கம் 23.24) கூறுகிறார்! இவை ஆதி சங்கரரின் உருவங்கள் தான் என்பதாக கல்வெட்டு ஆராய்ச்சி யாளர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்களா? என்று ஆதாரத் துடன் Dr. மஹாதேவன் எடுத்துக்காட்ட வில்லை. மேலும் விஷ்ணு கோவிலில் ஆதிசங்கரரின் பிம்பம் இருப்பதாக வைஷ்ணவர்கள் ஒப்புக்கொள்கிறார்களா என்பதையும் தெளிவு படுத்தவில்லை இது எப்படி இருந்தபோதிலும் ஆதிசங்கரர் காஞ்சிக்கு விஜயம் செய்த காலத்தில் இந்த பிம்பங்கள் கிடை யாது என்பது வரலாறுகளிலிருந்து தெரிய வருகிறது. பின் காலத்தில் (பல்லவர்கள்-சோழர்கள்) கருங்கல்லால் கோவில்களை புதிப்பித்த போது, என்ன கருத்துடன் சுட்டிக்காட்டப்பட்ட பிம்பங்கள் செதுக்கப்பட்டன என்பதற்கும் ஆதாரங்கள் காட்டப்படவில்லை. Dr. மஹாதேவன் ஒப்புக்கொள்ளும் விதம் இவைகள் சங்கரரின பிம்பங்களாக அங்கீகரித்தாலும்கூட சங்கரர், காஞ்சியில் ஒரு மாத காலம் மட்டும் இருந்து ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்ததை வைத்து சங்கரருக்காக பிம்பங்கள் ஏற் படுத்தினதாகக் கருதலாம். ஆனால் (1) சங்கரருக்குப்பின் பரம்பராகதமாக வந்துள்ளதாக கூறப்படும் குருமார்களின் ஸமாதி ஸ்தலங்கள் (monumental proof) காஞ்சியில் காண பிக்கப்பட்டால் அங்கு ஒரு மடம் ஸ்தாபிக்கபட்டது, என ஒப்புக்கொள்ளலாம். அப்படியாதொன்றுமில்லை. (2) காஞ்சியில் ஓர் மடம் இருந்திருந்து அங்கு குருக்கள் இருந் திருந்தால் அவர்களை விட்டுவிட்டு, 11-ம் நூற்றுண்டிலிருந்த ஸ்ரீ ராமானுஜர் காஞ்சியிலே மட ஸம்பந்தமில்லாத யாதவப்ர காசர் என்ற வித்துவானிடம் வேதாந்தம் வாசித்தார் என்ற சரித்திரம் ஏற்பட்டிருக்காது. ஸ்ரீராமானுஜருடைய அந்தஸ்துக் குரியவாறு காஞ்சியிலேயே மடாதிபதியாக வீற்றிருந்ததாகக் கருதப்படும் குருவிடம் வேதாந்தம் வாசித்திருக்கலாம். அல் லது வைஷ்ணவ மதத்தை கைக்கொண்டபின், ஸ்ரீராமனுஜர் காஞ்சி மடத்திலிருந்த அத்வைதகுருவோடு வாதம் புரிந்ததாக சரித்ரம் ஏற்பட்டிருக்கும். அப்படி சரித்ர வரலாறுகளில்லை. (3) தவிரவும் காஞ்சீ வட்டாரத்திலேயே 16-ம் நூற்றுண்டி லிருந்த ஸ்ரீ அப்பையதீக்ஷிதர் காஞ்சீ மடத்தின் முக்ய பண்டித ராக இருந்து கொண்டும், தன் கிரந்தங்களை காஞ்சியிலேயே

times, and not during or immediately after the time of Sri Sankaracharya, as we might be led to think from the writers statement that he was his disciple.

f) அனந்தானந்தகிரி சங்கர விஜயம் பிரமாணமல்ல என்பதாக காசியிலுள்ள பல பண்டிதர்களின் ஸபையில் 30—9—1934 ம் தேதியில் வியவஸ்தை செய்யப்பட்டதாயும் வாராணஸியில் வஸித்த ஸ்ரீ J V. ராஜகோபால சர்மா, தன் "கும்பகோண மடவிஷய விவாதம்" என்னும் புஸ்தகத்தில் விவரமாய் கூறியிருக்கிறார்.

g) ஸ்ரீ N. வெங்கடராமன் என்ற ஓர் கும்பகோணம் மடம் சிஷ்யர் குறிப்பிடுவது யாதெனில் :—

Anandagiri Sankara Vijayam is equally valueless and obviously a forgery, for the auther refers to Ramanuja and Madhwa who lived in the eleventh and twelfth centuries respectively.

இவ்விதமான முன் குறிப்புக்களைத் தெரிந்து கொண்டே பதிப்பாளர் இப்புத்தகத்தை தற்சமயம் 1971-ம் வருஷத்தில் அச்சிடச்செய்து பிரசுரம் செய்தார் என்றால், முன் குறிப்புகள் மறைந்து போகட்டும் என்ற கருத்துடன் பிரசுரம் செய்திருக்கலாம். அல்லது இப்பேர்பட்ட குறிப்புகளை பதிப்பாளர் தெரிந்துகொள்ளவில்லையென்றால், இந்த வெளியீட்டின் மூலமாகவாவது தெரிந்து கொண்டு தெளிவு பெறலாம், என நம்பப்படுகிறது. எந்த பிரகாரமாக ஆராய்ந்து பார்த்தாலும், இந்த 1971-ம் வருஷத்திய சங்கர விஜய வெளியீடு பழைய உளுத்துப்போன கட்டைக்குப் பூண் போடுவது போலவும் தெரிந்துகொண்டிருக்கும் நீர்க்கொப்பளத்துக்கு தையல் போடுவது போலவும் ஆகும். K. T. தெலாங்கு, Dr. பர்னல், Professor வில்சன் இவர்கள் விருப்பு வெறுப்பு அற்ற ஆராய்ச்சியாளர்கள். வித்வான் பாஷ்யாசார்யார், ஸ்ரீவைஷ்ணவர் எனப் புலப்படுவதால் இப்புத்தகம் 198-ம் பக்கத்தில் காணப்படும் கதைக்கும், பதிப்பாளரின் குறிப்புக்கும் மறுப்பாக ஆகிறது. ஸ்ரீ N. வெங்கட

இவருடைய வேறோர் குறிப்பாவது :—

"It may be added here, that I have great doubts as to the Sankar Vijaya published at Calcutta, being really a work of Anandagiri the pupil of Sankara".

மற்றோர் இடத்தில் இவரே குறிப்பிடுவதாவது :—

"…….it therefore follows that the author of the Sankara Vijaya cannot have lived long, if at all before the 14th century, after christ, and cannot therefore be identical with the Anandagiri who was the pupil of Sankara".

d) ஓர் வைஷ்ணவ வித்வான் பாஷ்யாசார்யார் என்பவரின் அபிப்பிராயமாவது :—

It is very much to be doubted, whether this was written by Anandagiri, the famous disciple of Sri Sankaracharya; for the work is partly in poetry and partly in prose, and the nature of style and many grammatical mistakes show, that the author must have been only a beginner in the study of Sanskrit language. It is stated therein that he refuted certain systems, philosophical and sectarian, such as those of Indra, Kubera, Yama, or Chandra which do not seem to have been mentioned in any sanskrit work and therefore can have existed only in the imagination of the writer. It is also stated, that he had desciples named Lakshmana and Hasthamalaka; the former was afterwards called Sri Ramanujacharya, and preached Vaishnava religion and wrote a Bashya (commentory) on the Vedantha Sutras, while the latter went to Udipi and preached Dwaitha philosophy. There cannot be a sillier statement. By mentioning these two references it is pretty certain, that the writer of this Sankara Vijayam, lived after their

திரத்தையும் மாற்றிக் கூறுவது அடுக்காது. ஸத்யத்துக்குப் புறம்பாக ஓர் நூதன கல்பனையை செய்யக் கூடாது.

(25) இந்த அனந்தானந்தகிரி சங்கர விஜயத்தைக் குறித்து, யாதொரு துவேஷபுத்தியுமில்லாத பலர் முன்னமேயே அபிப்பிராயங்கள் கொடுத்திருக்கிருர்கள். அவற்றுள் சிலவற்றை எடுத்துக்காட்டுவது இங்கு பிரக்ருதமாக ஆகும்:- a) Dr. பர்னல் என்பதாக தஞ்சாவூரில் முன்னம் ஜட்ஜ் ஆக உத்யோகம் பார்த்துள்ளார். அவர் ஸம்ஸ்கிருத ஞானமுள்ளவர். அவர் அனந்தானந்தகிரி சங்கர விஜயத்தைக் குறித்து இவ்விதம் எழுதியுள்ளார் —

"This seems to be a quite modern work written in the interest of a schismatic matha on the Coromandal Coast which has renounced obedience to the Sringeri Matha, where Sankaracharyas' legitimate successor resides".

Dr. பர்னல், சிருங்கேரி மடத்துக்கு எவ்விதமாகவும் ஸம்பந்தப் பட்டவரல்ல

b) ப்ரொபெசர் வில்சன் என்பவர் இவ்விதம் எழுதுகிருர்.

"There is but little reason to attach any doubt to the former (i.e. Ananthanandagiri's work) as some of the marvels it records of Sankara which the author professes to have seen, may be thought to affect its creditability, if not its authenticity and Anandagiri must be an unblushing liar or the book is not his own".

c) K. T. தெலாங் குறிப்பிடுவதாவது :—

" .........the work therefore cannot have been composed by a pupil of Sankara, consequently not by Anandagiri".

குருவிடம் அரங்கேற்றியும் ஸ்ரீமுகம் வாங்கிக் கொண்டும் காஞ்சீகுருவின் பேரில ஏதேனும ஓர் ஸ்தோத்ரமாவது செய்திருக்கவும் வேண்டும். ஸ்ரீ அப்பையதீக்ஷிதரின சரித்திரத்தில் இவ்விதம் காணப்படவில்லை. (4) கி. பி. 1797-ம் வருஷம் வரையில் ஏற்பட்ட சில கோர்டு நடவடிக்கைகளில் காஞ்சீ வட்டார வழக்குகளை சிருங்கேரி ஆசார்யாளின் அபிப்பிராயம் கேட்டு தீர்ப்பு செய்திருப்பதாய் தெரியவருகிறது. இவ்வழக்குகள் காஞ்சியில் குரு இருந்திருந்தால் சிருங்கேரி ஆசார்யாளுக்கு அபிப்பிராயக்கோறி கோர்டார் அனுப்பியிருக்க வேண்டியதில்லை. இவ்விதம் பரிசீலனை செய்து பார்த்தால் காஞ்சியில் கும்பகோணம் மடத்தாருக்கு கி.பி. 1839ம் வருஷத்தில்தான் நூதனபிரவேசம் என்பது ஸ்திரமாகிறது. கி பி. 1842 ம் வருஷத்தில், காமாக்ஷியம்மன் கோவில் டிரஸ்டியாக நியமித்த East India Company உத்திரவிலும் "கும்பகோணம் மடம் சங்கராசார்யார்" என்பதாகவே மு கவரி காணப்படுகிறது. சங்கரர் காஞ்சியில் மடம் ஸ்தாபித்ததாக வரலாறுகள் கிடையாது. பல நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது இது பொருந்தவுமில்லை.

இந்த ரீதியில் கல் வெட்டுகள் பிம்பங்கள், இருப்பதை வைத்து நாம் கதைகளை ஏற்கவேண்டுமென்றால், மதுரையில் மீனுக்ஷியம்மன் கோவில் கிளிக்கூட்டு மண்டபத்திலிருக்கும் பஞ்சபாண்டவர்களின் பிம்பங்களை ஆதாரமாக வைத்து (மேலே 2 வது பாராவைப் பார்க்கவும்) கதம்பவனத்தை காம்யவனமென்று மஹாபாரதம் கூறுகிறது, எனவும் பஞ்சபாண்டவர்களின் வனவாஸம் கதம்பவனத்தில் (மதுரை வட்டாரத்தில்) நிகழ்ந்தது எனவும் ஸாதிக்கலாம்! வாலி - ஸுக்ரீவர்களின் பிம்பங்கள் மீனுக்ஷியம்மன் கோவிலிலிருப்பதை ஆதாரமாகக் கொண்டும், திருப்பரங்குன்றத்தில் வானரங்கள் வசிப்பதைக் கொண்டும் திருப்பரங்குன்றம் மலையை, கிஷ்கிந்தை எனவும் கூறி விடலாம்! ஆனால் ஸத்யத்துக்கு மாறுபாடு கிடையாது. சரித்திரத்தை மாற்றிக்கூறுவது பிழையாகும், காலாந்தரத்தில் ஏதோ காரணம் பற்றி ஏற்பட்ட ஹேதுக்களைக் கொண்டும் உண்மை வரலாற்றையும், சரித்

ராமன் கும்கோணம் மடத்து சிஷ்யராக ஆனபோதிலும் பாரபக்ஷமற்ற முறையில் தன் கருத்தை தெரிவிக்கிறார். காசியில் நடைபெற்ற வித்வித் ஸதஸ்ஸில் சாஸ்திர ஆராய்ச்சியோடு வியவஸ்தை பிறந்துள்ளது. ஆகையால் இந்த பாராவில் காட்டியுள்ள ஆராய்ச்சியாளர்களின் குறிப்புகள் நம்பிக்கைக்கு இடமில்லையென கூறமுடியாது. இப்பெரியோர்களின் குறிப்புகள் எனது இந்த வெளியீட்டுக்கு ஆதாரமளிக்கின்றன.

26. இதுவரை எடுத்துக்கூறிய விஷயங்கள் சுருங்க கூறப்படுகின்றன:—

a) மாதவீய சங்கர விஜயத்தையும் அதன் வியாக்யானத்தையும் பார்த்துவிட்டு, அவைகளில் காணப்படும் மேற்கோள்களையும் கதாபாகங்களையும் கைக்கொண்டு, அனந்தானந்தகிரியின் பெயரால் இந்த சங்கர விஜயம் சம்பூ நடையில் ஸமீப காலத்தில் தயார் செய்யப்பட்டுள்ளது. சம்பூ நடையிலுள்ள இந்த சங்கர விஜயத்தை மாதவரோ, வியாக்யானகாரர்களோ, பிராசீன கிரந்தங்களாக குறிப்பிட்டு பேசவில்லை.

b) சங்கரருக்கு பின் காலத்தியவரான பாரதீதீர்த்தர் முதலியவர்களின் கிரந்தங்களை இந்த அனந்தானந்தகிரி சங்கர-விஜயத்தில் நுழைத்துள்ளதும், அந்த பின் காலத்திய கிரந்தங்களை சங்கரரே தன் வாயால் சிஷ்யர்களுக்கு உபதேசித்தார் என கூறுவதும் சரித்திர ரீதியான அசம்பவம் ஆவதுடன் இது சங்கரருடைய ஸமகாலத்திய ஒருவரால் இயற்றப்பட்ட கிரந்தமல்ல என தீர்மானமாகிறது,

c) முன் ஏடுகளுக்கு நேர்விரோதமாக பின் ஏடுகளில் சரித்திரத்தை மாற்றியமைத்துள்ளபடியால் அனந்தானந்த கிரியின் பெயரை உபயோகித்து பலர்களால் ஸந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு மாறுதல்கள் கொடுத்து ஏடுகள் தயாரிக்கப் பட்டுள்ளன என நம்ப இடமளிக்கிறது.

d) சங்கரர் காஞ்சியில் ஒரு மாதகாலம் மட்டும் வசித்த காலத்திற்குள், சில சிஷ்யர்கள் ஆ - ஸேது - ஹிமாசலம்

சென்று ஷண்மத ஸ்தாபனம் செய்துவிட்டு காஞ்சிக்கு திரும்பி வந்தனர் என்ற கதை நம்பிக்கைக்கு இடம் தரவில்லை.

e) சிவரஹஸ்யம் 9-வது அம்சம் 16-வது அத்யாயத்திலுள்ள சுமார் 60 சுலோகங்களுள் முதல் 46 சுலோகங்களை மட்டிலும் காட்டியும், பின் சுலோகங்களை மறைத்தும் சங்கரர் காஞ்சியில் "ஸித்தி" பெற்றூர், என ஸ்திரம் செய்ய நினைப்பது ஒப்புக்கொள்ளத்தக்கதில்லை. சிவரஹஸ்யத்தில் பின்னூல் வரும் சுலோகங்கள் மாதவீய சங்கர விஜயத்தை அனுசரித்து வருவதாலும் சங்கரர் ஹிமயமலை பிரதேசத்திலிருந்து கைலாஸ பதவியடைந்தார் என்று கூறுவதாலும், Colophon உடன் முடிவு பெறுவதாலும் பின்வரும் சுலோகங்களால் சிவரஹஸ்யம் காஞ்சீ-கும்பகோணம் மடத்துக்கு ஸாதகமில்லையென்பதோடு, பாதகமாகவும் ஏற்படுகிறது.

f) பலயிடங்களில் சரித்திரத்தில் சங்கர பாஷ்யத்துக்கு முறணான விதத்தில் வேதாந்தம் கூறப்படுகிறபடியாலும் வியாகரண ரீதியான பல பிழைகளிருப்பதாலும் இந்த சங்கர விஜயம் எழுதினவர்கள் ஸம்ஸ்கிருதத்தில் கிரந்த ரசனைக்குறிய பரிச்சயமில்லாதவர்களென நம்ப இடமளிக்கிறது.

g) மூலகிரந்தத்திலேயே மஹாவாக்யங்கள் நான்கு மட்டும் என காட்டப்பட்ட போதிலும் एव என்ற சப்தத்தால் இதர வாக்கியங்களை வியாவிருத்தி (தடை) செய்த போதிலும், பதிப்பாளர் தனது குறிப்பில் மஹாவாக்யங்கள் நான்குக்கு மேலுண்டு எனவும், கும்பகோணம் மடத்தாரின் ओं तत् सत् என்ற சப்தங்கள் மஹாவாக்யம் என ஹடமாக கூறுவதும் ஸம்பிரதாயத்துக்கு விரோதம்.

h) இந்த அனந்தானந்தகிரி சங்கர விஜய ஏட்டு பிரதிகளையும் சென்ற நூற்றூண்டு அச்சுப் பிரதிகளையும் பார்த்த ஆராய்ச்சியாளர்கள், இந்த கிரந்தத்தைக் குறித்து மதிப்புரைகள் நன்றூக, எழுதவில்லை. பல முக்கிய ஸம்பவங்கள் இப்புத்தகத்தில் இடம் பெறவில்லை. இத்யாதி காரணங்களால் இநத அனந்தானந்தகிரி சங்கர விஜயம் சங்கரருடைய

சரித்திரத்தை பல தப்பிதங்களுடன் எழுதப்பட்டதாய் தீர்மான மாவதுடன் இது பிரமாணமான கிரந்தமாகாது என உறுதியாகக் கூறலாம்.

7. இவ்விதமான ஓர் கிரந்தத்துக்கு மதரூஸ் ஸர்வகலாசாலை மூலம் பிரசாரமடையச் செய்தது, இதைப்படிப்பவர்களுக்கு விச்வாஸ புத்தியை ஏற்படுத்துவதற்காகத்தான் எனப் புலப் படுகிறது. மேலே காட்டப்பட்ட குற்றங்களை யார் படித் தாலும் முன்னம் வெளிவந்துள்ள "வியாஸாசலீய சங்கர விஜயத்திற்கு போலவே இந்த சங்கர விஜயத்திற்கும் விச்வாச புத்தி ஏற்பட நியாயமில்லை. ஆதிசங்கரருடைய புனிதமான பெருமையைக் குறைப்பதற்குரிய "வேத வியாஸ சங்கர ஸம் வாதம்" முதலிய சரித்திரங்களுக்குரிய விமர்சனத்தை பிறர் அறிந்து கொள்ள வேண்டாமென்ற கருத்துடன், அந்த விமர்சனத்தை இங்கே விடப்பட்டுள்ளது. இந்த கிரந்தம் இவ்வளவு பிழைகளுடன் கூடியது என மதரூஸ் ஸர்வகலா சாலை அதிகாரிகளுக்கு முன்னமேயே தெரிந்திருக்காது என நம்பப்படுகிறது. தெரிந்திருந்தால் இப்புஸ்தகத்தை அச்சுப் போட்டு வெளியிட அங்கீகாரம் அளித்திருக்க மாட்டார்கள், என்பதுடன், சர்வகலாசாலையில் மிகப்புனிதமான ஸேவையின் பொருட்டு உத்யோகம் வகிக்கும் மதிப்பிற்குரிய ப்ரொபெஸர் களையும் அவர்களுடைய அருமையான நேரத்தையும் அறிவை யும் ஸேவையையும், இதில் செலவழிக்க அனுமதித்திருக்க மாட்டார்கள். பணச் செலவுகளும் வீணாக ஆகியிருக்காது. ஸர்வகலாசாலையும் அதன் ப்ரொபெஸர்களும் கக்ஷி சார்பற்ற முறையிலும், உண்மைக்கு மாறாகாத முறையிலும் எல்லா ஜனங்களுடைய ஆதரவு பெறும் முறையிலும் புஸ்தகங்களை வெளியிடச் செய்வது சாலச்சிறந்தது, என்ற எனது மன பூவந்த வேண்டுகோளுடன் இதை முடிக்கிறேன். எனக்கு யாரிடமும் த்வேஷம் கிடையாது. ஆனால் ஸத்யம் விளங்க வேண்டும் என்ற ஒரே கருத்துடன் இவ்வளவையும் சொல்ல நேரிட்டது என்பதை வாசகர்களும் ஸர்வகலாசாலை அதிகாரி களும், புரொபெஸர்களும் அறியும்படி கேட்டுக்கொள்கிறேன்.

सत्यमेव जयते नानृतं, सत्येन पन्था विततो देवयान : ।
येनाक्रमन्ति ऋषयो ह्याप्तकामा : यत्र तत्सत्यस्य परमं निधानं ॥

தர்மத்திலும் ஸத்யத்திலும் விருப்பமுள்ளவர்கள் இதை கட்டாயம் 10 நபருக்காவது வாசித்துக் காண்பியுங்கள்.

சுபம்.

M. E. சங்கரநாராயண சர்மா,
அனைத்திந்திய ஸ்ரீ பகவத்பாத சிஷ்யர்கள் ஸபை,
49, லெக்ஷ்மிநாராயணபுர அக்ரஹாரம்,
மதுரை-1.



## பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 3 | गृहीतु | गृहीतुं |
| 4 | 4 | सकल | सकलं |
| 6 | 14 | बभूवृः | बभूवुः |
| 7 | 32 | ज्ञा-नारुय | ज्ञानाख्य |
| 9 | 16 | Phd. | Ph. D. |
| 15 | 22 | काञ्चयां | काञ्च्यां |
| 15 | 23 | ब्रह्मै य | ब्रह्मैक्य |
| 15 | 23 | भाष्य | भाष्यं |
| 15 | 24 | व्यासन | व्यासेन |
| 15 | 27 | स्व | स्वे |
| 15 | 29 | पद | पदं |
| 21 | 29 | பிரகணை | பிரகரணை |
| 23 | 16 | ஆனந்தகி | ஆனந்தகிரி |
| 23 | 20 | வென்னுபெயர் | வென்னும் பெயர் |
| 26 | 15 | मद्भुत्य | मद्भृत्य |
| 30 | 4 | அனத்தா | அனந்தா |
| 31 | 31 | वीदु | विदु |

## பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 3 | गृहीतु | गृहीतुं |
| 4 | 4 | सकल | सकलं |
| 6 | 14 | बभूव्रुः | बभूवुः |
| 7 | 32 | ज्ञा-नाख्य | ज्ञानाख्य |
| 9 | 16 | Phd. | Ph. D. |
| 15 | 22 | काश्चयां | काश्च्यां |
| 15 | 23 | ब्रह्मै य | ब्रह्मैक्य |
| 15 | 23 | भाष्य | भाष्यं |
| 15 | 24 | व्यासन | व्यासेन |
| 15 | 27 | स्व | स्वे |
| 15 | 29 | पद | पदं |
| 21 | 29 | பிரகண | பிரகரண |
| 23 | 16 | ஆனந்தகி | ஆனக்தகிரி |
| 23 | 20 | வென்னுபெயர் | வென்னும் பெயர் |
| 26 | 15 | मद्भुत्य | मद्भृत्य |
| 30 | 4 | அனத்தா | அனந்தா |
| 31 | 31 | वीदु | विदु |

*Copies can be had from:-*

1) Sri Chellappa Iyer, Ramanna and Co.,
Book-Sellers, 110, Satyamoorthi Street,
Tirunelveli Town

2) Sri T.R. Ananthasubramania Iyer, B.A., B.L.,
Advocate, 16, Malavya Street,
Ramnagar, Coimbatore-9.

3) Sri S. Siddhanagasubramania Iyer,
19, Lakshminarayanapura Agraharam,
Madurai-1.

4) Sri Ramalingeswara Rao,
7, Baroda Street, West Mambalam,
Madras—33.

5) Sri P. S. Narayana Iyer,
Parli Tile works, Parli, Kerala State.

6) Ganga Thunga Prakashan,
51, Hanuman Ghat, Varanasi, U.P.

7) Chatur Amnaya Sankar Mutt Samithi,
260, III Block, Rajaji Nagar,
Bangalore-10